# கல்கி

## பொருளடக்கம்



பரிதாபி, புரட்டாசி 15 ❀ அக்டோபர் 1, 1972




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை(இலங்கைநாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# நீங்கள் இன்று எவ்வளவு சம்பாதிக்கிறீர்கள் என்பது முக்கியம் அல்ல, நாளைக்காக எவ்வளவு சேமிக்கிறீர்கள் என்பது தான் முக்கியம்

கரண்ட், சேவிங்ஸ், ஃபிக்ஸ்ட் மற்றும் ரெக்கரிங் டிப்பாஸிட் ஆகிய கணக்குகளை துவக்கவும், சேமிக்கவும் பல வசதிகளை நாங்கள் அளிக்கிறோம்.




தலைமை காரியாலயம் :
கல்கத்தா



UCO-2/72

கல்கி

மலர் 32
இதழ் 9



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

\- பாரதியார்

# போனஸ் உயர்வும் விலைவாசியும்

தொழிலகங்கள் தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்சம் நான்கு சதவிதம் போனஸ் கட்டாயமாகக் கொடுக்க வேண்டும் என்றிருந்ததை இப்போது 8.33 சதத்துக்கு அரசாங்கம் உயர்த்தியிருக்கிறது. அதாவது, வருடத்தில் ஒரு மாதச் சம்பளத்தை இனிக் கட்டாயமாக போனஸாகக் கொடுக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது.

தொழிலகங்கள் கொடுக்க வேண்டிய போனஸ் பணம் அவற்றின் லாப நஷ்டத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதுதான் முறை. போனஸ் பிரச்னை தொழிலாளர்கள் — நிர்வாகத்தினர் இவ்விருபாலாரிடையே லாபத்தின் போக்கின்படி தீர்த்துக் கொள்ள வேண்டியது. இதை [illegible]மையமாக வைத்து வேலை நிறுத்தங்கள், போராட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள் எல்லாம் அடிக்கடி ஆண்டுதோறும் நடத்தப்பட்டாலும், இந்த அடிப்படை உண்மையைப் புறக்கணிக்க முடியாது.

ஆனால், இப்போது அரசாங்கம் எடுத்துள்ள முடிவு அரசியல் கண்ணோட்டத்தில் எடுக்கப்பட்டதாகவே தோன்றுகிறது. இதற்காகப் பிரசாரங்கள் நடந்தன. இதைப் பரிசிலனை செய்ய நியமிக்கப்பட்ட குழுவினர் முடிவெடுக்க முடியாமல் இரண்டு அறிக்கைகள் சமர்ப்பித்தனர். இவ்விரண்டு அறிக்கைகள் மீது அரசாங்கம் நடத்திய பேச்சு வார்த்தைகளின்போது சிக்கல்கள், நிர்ப்பந்தங்கள் தோன்றின. இவற்றில் உட்புகுந்து மத்தியஸ்தம் செய்து வைக்கும் பணியை எதிர்பார்த்தபடியே அரசாங்கம் மேற்கொண்டு, நிர்ப்பந்தங்களிலின்று விலகிக் கொள்ளவோ, சமரசம் செய்யவோ வகை புரியாது விழித்தது. கடைசியில் வேறு வழி தெரியாமல் லாபம் இருந்தாலும், நஷ்டம் இருந்தாலும் 8.33 சதம் போனஸ் தரவேண்டும் எனத் தீர்மானித்து விட்டது. இவற்றை எல்லாம் இணைத்துப் பார்த்தால், எந்த அடிப்படை இவ்விஷயத்தில் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டுமோ, அது கவனிக்கப்படவில்லை என்பது தெளிவாகவே புலனாகிறது.

போனஸ் உயர்வுக் கோரிக்கைக்குக் காரணம் விலைவாசிகளின் உயர்வு. இதன் விளைவாக ஏற்படும் ரூபாயின் மதிப்புக் குறைவை ஈடுசெய்ய அதிக போனஸ் கோரப்படுகிறது. இதனால் தொழிலாளி மக்களுக்குக் கிடைக்கக் கூடிய தொகை எவ்வளவாக இருந்தாலும் இத்தொகை செலவு செய்யப்படும் போது, ஏற்கனவே உயர்ந்துள்ள விலைவாசிகளை மேலும் உயர்த்தவே துணை புரியும். இதைக் காரணமாக வைத்து, காலப் போக்கில் மற்றொரு போனஸ் கோரிக்கை எழுப்ப வகையும் ஏற்படும். இப்படிப் போய்க் கொண்டே இருக்கும் நிலை விரும்பத்தக்கதல்ல.

அரசாங்கம் கவனிக்காத, கவனிக்கத் தவறிய, மற்றொரு விளைவையும் இங்கே குறிப்பிட வேண்டும். லாபத்தில் இயங்கும் தொழில்கள் லாபத்தைப் போனஸாகக் கொடுத்துவிடும். தொழில் வளர்ச்சிக்குப் பணம் இருக்காது. நஷ்டத்தில் இயங்குபவை மேலும் நஷ்டத்தில் அழுந்திக் கரையேற முடியாமல் தவிக்கும். இரண்டு விதங்களிலும் தொழில் வளமும், வளர்ச்சியும், விஸ்தரிப்பும் பாதிக்கப்படும். பொருள்கள் அதிகமாக உற்பத்தியாகி, அதன் மூலம் விலைவாசிகள் குறைவதற்குப் பதிலாக, உற்பத்தி குறையும்; ஏற்கனவே உள்ள வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும். இப்போதுள்ள சூழ்நிலையில், பொருளாதார ரீதியில் ஏற்படக் கூடிய விளைவுகளை அரசாங்கம் தீர ஆலோசியாமல் போனது வருந்தத்தக்கது.

இப்படிச் சொல்லும்போது தொழிலாளிகள் கோரிக்கைக்கு நமது ஆதரவில்லை என்பதாகாது. விலைவாசி உயர்வினால் கஷ்டப்படும் மக்களுக்குப் பரிகாரம் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதே. அதற்கான நடவடிக்கை எடுத்தால், தொழிலாளர்களுக்கு மட்டுமின்றி, எல்லா மக்களுக்குமே நிரந்தரமான பரிகாரம் கிடைக்கும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தெருக்களைச் சுத்தம் செய்வோர்களுக்கும் தோட்டி வேலை செய்பவர்களுக்கும் புதிய பெயர் வைக்கலாம் என்று சில நல்ல மனிதர்கள் நினைக்கின்றனர். புதுப் பெயர் வைத்தால் சிறிது காலத்துக்கு அவர்கள் அந்தஸ்து உயர்ந்துவிட்டதாக நினைத்துத் திருப்தி ஏற்படலாம். ஆனால் போகப் போக, அப்பெயர் அந்தத் தொழில் செய்வோரைக் குறிக்கும் சொல்லாக மட்டுமே நின்றுவிடும். அவர்களுக்கு வேறு எந்த உயர்வும் ஏற்படாது. புதுப் பெயர் சூட்டுவது இப்போதுதான் புதியதாகக் கையாளப்படும் முறையல்ல. பல ஆண்டுகளுக்குமுன் காந்திஜியும், அவருக்கு முன் வைஷ்ணவ ஆசாரியர் ஸ்ரீ ராமாநுஜரும் இம்முறையை மேற்கொண்டனர். உயர்ந்த நோக்கத்துடன்தான் 'ஹரிஜன்' என்ற பெயரை காந்திஜி சூட்டினார். ஸ்ரீ ராமாநுஜர் 'திருக்குலத்தார்' என்று அதே உயர்ந்த கருத்தில், இவர்களுக்குப் பெயர் சூட்டினார். புனிதத் தன்மையை உணர்த்த 'திரு' என்ற அடைமொழியை அவர் அந்தக் குலத்துக்கே சூட்டினார். ஆனால் என்ன பலன் கிடைத்தது என்பதை நாம் எல்லாம் நன்றாகவே அறிவோம். இந்த வார்த்தைகள் எல்லாம் எந்த வர்க்கத்தினருக்குச் சூட்டப்பட்டனவோ, அவர்களைக் குறிக்கும் சொற்களாக மட்டுமே நின்றுவிட்டன. அவர்களுக்கு எந்தவித நன்மையும் ஏற்படவில்லை. திருக்குலத்தார் என்றாலும், ஹரிஜன் என்றாலும், அவர்களுடைய நிலைமை மாறிவிடவில்லை. இப்போது 'சுசி சேவக்கு'கள் என்று தெருக் கூட்டுவோரையும், தோட்டிகளையும் அழைப்பதால், தங்கள் நிலை உயர்ந்து விட்டதாக அவர்களுக்குக் கொஞ்ச காலத்துக்குப் பிரமை ஏற்படலாம். காலப்போக்கில் சுசிசேவக்குகள் என்றால் தெருக் கூட்டுவோரும் தோட்டிகளும் என்று பொருள்படுமே தவிர அவர்களுடைய நிலைமை என்றும் போலவேதான் இருக்கும். எந்தப் பெயரிட்டுச் சொன்னாலும் ரோஜா மலர், ரோஜா மலராகவே இருக்கும். ரூபாயைப் 'பாரத டாலர்' என்றாலும், 'ஹிந்துஸ்தான் பவுண்டு' என்றாலும் உண்மை மதிப்பில் ரூபாயாகவேதான் இருக்கும். இந்தியாவைப் பாரதம் என்றாலும், முஸ்லிம் கவி இக்பால் கூறியதுபோல் ஹிந்துஸ்தான் என்றாலும், இந்திய மக்கள் இந்திய மக்களாகவேதான் இருப்பார்கள். உண்மையிலேயே மாறுதல் ஏற்பட வேண்டுமானால், மக்கள் ஹிருதய பீடத்தில் ஆண்டவனை இருக்கச் செய்ய வேண்டும். ஆண்டவனை அண்டவிடாமல் விரட்டி அடிக்கும் ஆசாபாசங்களை ஆண்களும் பெண்களும் தங்கள் மனத்திலிருந்து அகற்றிவிட்டால் இது சாத்தியமாகும். ஆனால் ஆண்டவன் என்னவோ நம்முடைய இருதயத்தில் அமர வேண்டும் என்றுதான் காத்துக் கொண்டிருக்கிறார். நம்மை அவர் காப்பாற்ற வேண்டும் என்று நாம் விரும்புவதைவிட அதிகமாக நம்மைக் காப்பாற்றுவதில் அவர் தீவிரமாக இருக்கிறார். நாம்தான் அதற்கு இடம் கொடுக்கவேண்டும்.

★

இந்திய அரசியல் சாஸனம் மக்களுக்கு அளிக்கும் ஜீவாதார உரிமைகள் விஷயம் தில்லி சுப்ரீம் கோர்ட்டின் பரிசீலனைக்கு விரைவில் வரும். கோலக் நாத் வழக்கில் முன்பு சுப்ரீம் கோர்ட்டு அளித்த தீர்ப்பில், இப்போதும் சுப்ரீம் கோர்ட் உறுதியாக நிற்கும் என்று எதிர்பார்க்கிறேன். இல்லையேல், ஜனநாயக முறை போய் ஏகசாதிகாரம் ஏற்பட்டு இந்தியா சர்வாதிகார ஆட்சிக்குள் நழுவிவிடும். இந்நிலை ஏற்படின் ஏதேதோ கிடைக்கும் என்று மக்களுக்கு ஆசை காட்டப்பட்டாலும் மக்கள் சுதந்திரத்தை இழப்பர்; அரசாங்கம் எல்லா அதிகாரங்களையும் சுவீகரித்துக் கொண்டுவிடும். சர்வவல்லமை பொருந்திய அரசாங்கத்தின் அடிமையாகிப் போவார்கள் மக்கள். அரசியல் நிர்ணயச் சட்டத்தை வகுத்த பெரியோர்கள் இந்திய மக்கள் சுதந்திர புருஷர்களாக வாழ வேண்டும் என்று இட்டமிட்டதற்கு நேர்மாறான நிலை ஏற்படும். கடவுளின் அருளினால் நான் இன்னும் வாழ்ந்து வருகிறேன். அதனால் இந்தக் கடும் எச்சரிக்கை செய்ய வேண்டியது என் கடமையாகிறது.

ஏழைமைக் கொசுவே விட்டேனா பார் உன்னை!

இந்திரா

குப்பையை நீக்காதவரை கொசுவும், ஈயும் உற்பத்தியாகிக் கொண்டேதான் இருக்கும்!

தவறான பொருளாதாரக் கொள்கை

ராஜாஜி

ஏழைமையை ஒழிக்கத் தமது கட்சி உறுதி பூண்டிருப்பதாக இந்திரா கூறினார் —செய்தி

நாட்டு முன்னேற்றம்

எல்லாத்துக்கும் அமெரிக்க ஸி.ஐ.ஏ. சூழ்ச்சிகள் தான் காரணம்!

நாட்டின் பொருளாதார சீர்கேடு

டெல்லி வன்முறை

இந்த நொண்டிக் குதிரையை வச்சுக்கிட்டு எப்படி வண்டி ஓட்டறது?

பொது மக்கள்

# தகராறு தீர்ந்தது – வாழ்த்துகிறோம்

சிம்ஸன் கம்பெனிகள் விவகாரத்தில் சமரசம் ஏற்படாமல் இருந்து வந்த சில தகராறுகளிலும் நிர்வாகத்தினர் — தொழிலாளர் யூனியனுக்கிடையே இப்போது சுமுகமான சமரஸம் ஏற்பட்டுவிட்டது. வேலைக்கு வராமல் விலகி நின்ற ஏனைய தொழிலாளர்களும் வேலைக்குத் திரும்பினர் என்ற செய்தி நாட்டில் எல்லோருக்கும் திருப்தி அளிக்கக் கூடியது. இச்சமரசத்தை உண்டாக்கிக் கொடுத்த அமைச்சர்களையும், யூனியன் தலைவர்களையும் நாம் பாராட்டவே வேண்டும். தொழிலாளர்களிடம் எப்போதுமே அனுதாபமும் தாராள மனப்பான்மையும் காட்டிப் பெருமை யடைந்த திரு அனந்தராமகிருஷ்ணனுடைய சம்பிரதாயத்தில் வளர்ந்த திரு ஏ. சிவசைலத்தின் நன்முயற்சியும், நன்மனமும் தொழிலாளர்களிடையே நீடித்த நட்பு உணர்ச்சியைத் தோற்றுவிக்கும் என்று நம்பலாம். இப்போது ஏற்பட்டுள்ள நல்ல சூழ்நிலை மேன்மேலும் வளர்ந்து நிரந்தரமாக இருக்க சிம்ஸன் கம்பெனிகளுக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.

# மாநில சுயாட்சி

மாநில சுயாட்சி, பிரிவினை, மாநில அரசுக்கு அதிக அதிகாரங்கள், — இவையெல்லாம் வெவ்வேறு கருத்துக்களைத் தெரிவிக்கும் சொற்கள். அரசியல் மேடைகளில் பேசும் பேச்சாளர்கள், உணர்ச்சி வசப்பட்டோ, வேண்டுமென்று தெரிந்தோ, அல்லது தெரியாமலோ இவ்வித்தியாசங்களைப் பொருட்படுத்துவதில்லை. மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கம் குறைய வேண்டும், அல்லது மாநில அரசாங்கத்துக்கு அதிக அதிகாரங்கள் வேண்டும் என்று கோருவதாக எண்ணிக் கொண்டு ''பிரிவினை'' கோஷமும், சுயாட்சிக் கோஷமும் எழுப்பப்படுவதுடன் சுயாட்சிக்குக் கெடுவுநாள் வைக்க மத்திய அரசுக்கு 'நோட்டீஸ்' கொடுப்பது பற்றியும் காரசாரமாகப் பேசப் படுகிறது. இதனால் மக்கள் மனத்தில் வீணான குழப்பங்கள் விளைகின்றன. தமிழக ஆட்சியாளர்களின் உட்கருத்துகள் பற்றிச் சந்தேகம் கொள்ளவும் இடம் உண்டாகிறது. அமைச்சர்களும், நெருக்கடியான சமயங்களில், முரணான பேச்சுக்களுக்கு விளக்கம் கொடுக்க, நுட்பமான தர்க்கவாதங்களைத் துணைக்குத் தேடவேண்டியவர்களாகிறார்கள். மாநில அரசுக்கு அதிக அதிகாரங்கள் தான் வேண்டும் என்றால் பிரிவினை, சுயாட்சி போன்ற வார்த்தைகளையே கட்சிப் பேச்சாளர்கள் தங்கள் பேச்சுக்களிலிருந்து விலக்கிவிடுவது நலம்.



# தமிழ் நாட்டிலே

தீரன்

## இடிப்பது அவசியமா ?

**ப**ல லட்ச ரூபாய் செலவில் கட்டப்பட்டு இருபது ஆண்டுகளே ஆன ஒரு பெரிய கட்டிடத்தை மீண்டும் பல்லாயிரம் ரூபாய் செலவழித்து இடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது அதிர்ச்சியளிக்கக் கூடிய செய்தியாயிருக்கிறது அல்லவா?

1952 வாக்கில் கட்டப்பட்டு ஆந்திரா மைசூர், கேரளா அடங்கிய பழைய சென்னை மாநிலச் சட்ட மன்றம் கூடும் இடமாயிருந்ததும், மொழிவாரிப் பிரிவினைக்குப் பிறகு பாலர் அரங்கமாக மாற்றப்பட்டதுமாகிய கட்டிடம்தான் இப்போது இடிக்கப்படுகிறது. இதே கட்டிடத்துக்குச் சமீபத்தில் கலைவாணர் அரங்கம் என்று பெயர் மாற்றமும் செய்யப்பட்டது.

'இப்போது இதை இடித்துவிட்டு இன்னும் விரிவானதாகவும், அதிக வசதிகள் நிறைந்ததாகவும் கட்டப் போகிறோம்' என்கிறார்கள். விரிவாகவும், வசதிகள் நிறைந்ததாகவும் கட்டிடம் அமைக்க வலுவாகவும் இன்னும் பல்லாண்டுகள் தாங்கக் கூடிய விதத்தில் இருப்பதுமான ஒரு நல்ல கட்டிடத்தைச் செலவு செய்து இடித்துக் கொண்டிருப்பதை விட ஒரு புதிய இடத்திலேயே அந்த வேலையைத் தொடங்கலாமே என்று நமக்குத் தோன்றுகிறது. இடிக்கிற செலவாவது மீதப்படும். இடிக்க அவசியமில்லாத ஒரு நல்ல கட்டிடமும் பிழைக்கும். ஆனால் இந்த நியாயம் ஏனோ அரசுக்குத் தோன்றவில்லை?

## மூடப்பட்ட அனல்மின் நிலையம்

**ம**துரைக்கு அருகில் உள்ள சமயநல்லூரில் இருந்த அனல்மின் நிலையம் மூடப்பட்டுப் பொருள்கள் ஏலத்துக்கு விடப்பட்டிருக்கின்றன என்ற செய்தி பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. தொழில் வளர்ச்சிக்கும், மின்சாரத் தட்டுப்பாடுள்ள காலங்களில் பயன்படுத்துவதற்கும் அனல் மின் நிலையங்கள் தேவை என்று நிபுணர்கள் கருதும் காலத்தில் ஏற்கனவே செயல்பட்டுக் கொண்டிருந்த ஓர் அனல்மின் நிலையத்தை மூடிப் பொருள்களை ஏலம் விட்டிருக்கிறார்கள்.

பாய்லர், டர்பைன், ட்ரான்ஸ்பார்மர் போன்ற பெருமதிப்புள்ள பொருள்கள் மிகக் குறைந்த தொகைக்கு ஏலம் விடப்பட்டதாகவும் ஒரு புகார் கூறப்படுகிறது. மேற்படி பொருள்களை ஏலம் விடுவதற்குப் பதில் அரசே வேறு அனல் மின்நிலையத்துக்குப் பயன்படுத்திக்கொண்டிருக்கலாமே என்றும் ஒரு கேள்வி கேட்க முடியும். இந்த அனல்மின் நிலையம் மூடப்பட்டது சட்டசபை மதிப்பீட்டுக் கமிட்டியின் ஆலோசனையின் பேரில்தான் என்று முதல்வர் விளக்கம் கூறியுள்ள போதிலும் சில வினாக்கள் தொடர்பாகத் தெளிவான விளக்கங்களை மேலும் எதிர்பார்ப்பது தவறாகாது என்று கருதுகிறோம்.

## கிறிஸ்தவர் மகாநாட்டில் குழப்பம்

**செ**ன்னையில் நடைபெற்ற கிறிஸ்தவர் மகாநாட்டில் தமிழ்நாடு கிறிஸ்தவர் சங்கத் தலைவர் டி'மான்டி பேசத் தொடங்கியதும் குழப்பம் விளைவிப்பதற்கு என்றே திட்டமிட்டு வந்திருந்த சிலர் எழுந்திருந்து கூச்சலிட்டு, நாற்காலிகளை மேலே தூக்கிக் காட்டிப் பயமுறுத்தியும் தகராறு செய்திருக்கிறார்கள். குழப்பம் விளைவித்தவர்கள் கோரியபடி தமிழில் நிகழ்ச்சிகளை நடத்த ஒப்பியும் குழப்பங்கள் ஓயவில்லை என்று தெரிகிறது. கூட்டத்தில் பேசச் சென்ற முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம் பேசாமலே திரும்பி வர நேர்ந்துவிட்டதாம். பல நாட்கள் அரும்பாடு பட்டு ஏற்பாடு செய்த ஒரு மகாநாட்டை நடக்கவிடாமல் (பிற்பகல் நிகழ்ச்சி தவிர) செய்ததன் மூலம் குழப்பம் விளைவித்தவர்கள் எதையும் சாதித்திருக்க முடியாது. ஆனால் குழப்பத்தின் மூலம் அங்கே அமைதியாகக் கூடியிருந்த ஆயிரக் கணக்கானவர்களின் மனத்தைப் புண்படுத்த முடிந்திருக்கிறது. புண்படுத்துவதும் ஒரு சாதனையா?

## ஒரே சமயத்தில் ஏழு மோதல்!

'**வி**ரைவில் எல்லாவிதப் போக்குவரத்தும் தேசிய மயமாக்கப்படும்' என்று தமிழ் நாடு போக்குவரத்து அமைச்சர் பேசியுள்ள பேச்சைப் படித்துவிட்டுச் சென்னை நகரின் பல்லவா போக்கு வரத்து பஸ்களின் மோதல் செய்திகளையும் படித்தால் நமக்கு ஒரு நடுக்கமே வந்துவிடுகிறது. சில நாட்களுக்கு முன்



எலியட்ஸ் பீச் ரோடில் ஒரு பஸ் கூட்டத்தின் மேலேறி இரு மாணவர்கள் இறந்திருக்கிறார்கள். அதற்கு முன் பிரேக் பிடிக்காமல் ஒரு பஸ் பாதையை விட்டு விலகி ஒரு டீக் கடைக்குள் நுழைந்திருக்கிறது. பஸ்ஸுக்கும் டீ குடிக்கும் ஆசை போலும்! இப்போதோ முதலில் ஒரு விளக்குக் கம்பம், அப்புறம் சாலையில் இருந்த இரு தார் டிரம்கள், அப்புறம் ஒரு சைக்கிள் பயணி, மீண்டும் ஒரு சைக்கிள் ஆள், அப்புறம் ஒரு வீடு, அப்புறம் ஒரு தந்திக் கம்பம் என்று ஏழு பொருள்களின் மீது மோதிய பின்பே நின்றிருக்கிறது பல்லவா போக்குவரத்து பஸ். மேற்படி பஸ்ஸை

ஓட்டிய டிரைவரின் பெயர் 'வணங்கா முடி' என்று பத்திரிகையில் வந்திருக்கிறது. பஸ்ஸும் மோதல் விஷயத்தில் வணங்கா முடியாகவே இருந்திருக்கிறது!

## கடுமையான உழைப்பு

சென்னை சட்டக் கல்லூரி மாணவர் பேரவைத் தொடக்க விழாவில் பேசும்போது, திரு காமராஜ் அவர்கள் இளைஞர்களுக்கு சோஷலிஸம் பற்றி ஒரு தெளிவான விளக்கத்தையும் எச்சரிக்கையையும் கொடுத்திருக்கிறார்.

'அரசியல் தலைவர்கள் சோஷலிசம் என்ற வார்த்தையை மந்திரமாக — சொல்லப் போனால் தந்திரமாக உபயோகிப்பதைக் கைவிடவேண்டும். கடுமையான உழைப்புத்தான் சோஷலிஸ சுக வாழ்க்கைக்கான அடிப்படை என்பதை இந்த நாட்டிலுள்ள அத்தனைபேரும் மறந்துவிட்டார்கள். கல்லூரி மாணவர்களாகிய நீங்கள் படிக்காமலே பாஸ் செய்துவிட முடியுமா? பரீட்சையில் தேற வேண்டும் என்றால் கடுமையாகப் படிக்க வேண்டும். இதே போல் மக்களுக்குத் தேவையான உணவு கிடைக்க வேண்டும் என்றால்



கடுமையாக உழைக்க வேண்டும்'—என்று அவர் பேசியிருக்கும் பேச்சு எல்லோருக்கும் பயன்படும் அறிவுரையாகும். உழைப்பின் அருமையைப் பற்றிச் சொல்லாமல் இளைஞர்களுக்குப் பேசப்படும் மிக நாசூக்கான பேச்சுக்களை விடக் கடுமையான உழைப்பை வலியுறுத்தும் பேச்சு இளைஞர்களுக்குப் பெரிதும் பயன்படக்கூடியதாக அமைந்திருப்பதைப் பாராட்டுகிறோம்.

## கழக மின்சாரம்

சென்னையில் நடைபெற்ற அண்ணா பிறந்த நாள் விழாவில் தி. மு. கழக எழுச்சியை ஒரு மின்சாரம் என்று குறிப்பிட்டிருக்கிறார், அதன் பிரமுகர்களில் ஒருவரான திரு நெடுஞ்செழியன். லீக் ஆவது, ஷாக் அடிப்பது, ஃப்யூஸ் போவது, லூஸ் காண்டாக்ட் போன்ற மின்சார அபாயங்கள் உடனே நமக்கு நினைவு வருகின்றன. அவ்வப்போது எதிர்க் கட்சித் தொண்டர்களையும், அவர்கள் கடை கண்ணிகளையும் தாக்கும் ஷாக், பிரிவினை மனப்பான்மை என்ற இடர் இருட்டு, வரம்பு மீறிப் பேசும் லூஸ் காண்டாக்ட், ஆகிய அபாயங்கள் ஏற்படாமல் மக்கள் நல்வாழ்வுக்கு ஒளி வழங்கும் ஓர் அம்சத்தில் மட்டுமே கழகம் மின்சாரமாயிருக்க வேண்டும் என்று விரும்பியே திரு நெடுஞ்செழியன் இப்படி ஒப்பிட்டிருக்க வேண்டும் என்று நம்புகிறோம்.

## விண்ணப்பத்துக்கு ஐந்து ரூபாய்

'மின்சார வாரியத்தில் இன்று, எழுத்தர் வேலைக்கு மூவாயிரம்பேர் தேவை என்று அறிவிக்கின்றோம். அதற்கு ஒரு லட்சம் பேர் விண்ணப்பம் செய்திருக்கிறார்கள். ஆளுக்கு ஐந்து ரூபாய் விண்ணப்பக் கட்டணம். யார் யாரைத் தேர்ந்தெடுக்கிறீர்களோ அவர்களின் விண்ணப்பக் கட்டணத்தை மட்டும் வைத்துக்கொள்ளுங்கள். தேர்ந்தெடுக்கப்படாதவர்களுக்கு அந்த ஐந்து ரூபாயோ, பத்து ரூபாயோ எவ்வளவு கட்டணமானாலும் அதைத் திருப்பி அனுப்பி விடுங்கள் என்று சொல்லியிருக்கிறேன். மின்சார வாரியமும் அதை ஒப்புக் கொண்டிருக்கிறது. சில பேர் அங்கேயும் தரகர்கள் இருக்கிறார்கள்....... இடைத் தரகர்கள் யாரும் தேவை இல்லாமலே அவர்கள் (நல்ல பதில்களைச் சொல்லும் விண்ணப்பதாரர்கள்) தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.'

இவ்வாறு 14–9–72ல் கும்பகோணத்தில் பேசும்போது முதல்வர் கூறியிருக்கிறார். இதிலிருந்து முதல்வரே அஞ்சி எச்சரிக்கும் அளவு தரகர்களும், இடைத் தரகர்களும் உத்தியோக நியமனங்களில் குறுக்கிட்டு வருகின்றனர் என்பது தெரியத்தானே செய்கிறது?

## வளைவுகளால் வரும் மரணம்

அண்ணா பிறந்த நாளை ஒட்டி சென்னை பூவிருந்தவல்லி நெடுஞ்சாலையில் போடப்பட்ட வளைவு ஒன்று சரிந்து அதன் விளைவாக இருவர் மரணம் அடைந்து விட்டதாகத் தெரிகிறது. சாலைப் போக்குவரத்துக்கு இடையூறாகவும், பொதுமக்களை அபாயத்தில் ஆழ்த்தும் விதத்திலும் போடப்படும் அலங்கார வளைவுகள் எந்தக் கட்சியினரால் அமைக்கப்பட்டாலும் அவற்றுக்கு அனுமதி மறுக்கப்பட வேண்டும். பொதுமக்கள் நன்மைதான் முக்கியமே ஒழிய வீதிகளை ஆபத்துக்கிடமான முறையில் மறைத்து அலங்கரிப்பது முக்கியமல்ல. பொது நன்மைக்கு இடையூறான தவறுகள் யாரால் நடந்தாலும் அவை கண்டிக்கப்பட வேண்டியவையே.

## ஊழியர்களின் வேலை அல்ல

கருத்தடைக்கு ஆட்களைப் பிடித்து வருமாறு ஊழியர்களுக்குச் சுற்றறிக்கை அனுப்பி வற்புறுத்துவதாகச் சில பத்திரிகைகளில் செய்திகள் வருகின்றன. நகரசபை ஊழியர்கள், பஞ்சாயத்து ஆசிரியர்கள் ஆகியவர்களுக்கு ஏற்கனவே வரையறுக்கப்பட்ட பல பணிகள் உள்ளன. அந்த வேலைகள் தவிரக் 'கொசுறு' வேலையாகக் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு ஆள் பிடித்துக் கொண்டு வரச் சொல்லுகிறார்கள் போலிருக்கிறது. இது உண்மையாயிருக்குமானால் மிகவும் வருந்தப்பட வேண்டியதாகும். நகரசபை, பஞ்சாயத்து ஊழியர்கள் இந்த வேலைக்காக நியமனம் செய்யப்பட்டவர்கள் அல்ல என்பதை அவர்களுக்கு இப்படிச் சுற்றறிக்கை அனுப்புகிறவர்கள் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.



# பாபச்சுமை நீங்க....




மனம் கெட்டுப் போய் எவ்வளவோ பாபம் செய்திருக்கிறோம். குழந்தையாக இருந்ததிலிருந்து ஈசுவர தியானம் செய்திருந்தால் இவ்வளவு நாள் எவ்வளவோ பாபம் போயிருக்கும். இப்பொழுதோ மேலேயும் பாபத்தைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறோம். எத்தனை நாட்கள் ஈசுவரசரணாரவிந்த தியானம் செய்கிறோமோ அவ்வளவு நாட்களும் நம்முடைய பிறவிப் பயனை நாம் அநுபவித்தவர்களாகிறோம். இந்த ஜன்மத்தை எடுத்ததற்குப் பலன் அதுதான். அந்தச் சரணாரவிந்த தியானத்தைப் பண்ணச் சொல்லி எங்களுக்கு ஸ்ரீ ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகள் ஆக்ஞை செய்திருக்கிறார்கள். மற்றவர்களையும் செய்யச் சொல்லும்படி ஆக்ஞை செய்திருக்கிறார்கள்.

குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புகிறோம். அவர்கள் சரியாக நடக்காவிட்டால் உபாத்தியாயர் உபயோகமில்லை என்று சொல்லிவிடுகிறோம். நீதிசாஸ்திரமும் இதைத்தான் இன்னும் அழுத்தமாகச் சொல்கிறது. 'சிஷ்ய பாபம் குரும் வ்ரஜேத்' என்கிறது அது. அதாவது, சிஷ்யர்களுடைய பாபம் எல்லாம் குருவைச் சேரும். எல்லாருக்கும் குருவாகிய ஆதி ஆசார்ய ஸ்வாமிகள் எங்களைப் பிரதிநிதிகளாக்கி எல்லோரையும் ஈசுவரசரணாரவிந்த தியானத்தில் ஈடுபடுத்த வேண்டுமென்று ஆணையிட்டுவிட்டார்கள். ஒருவரை 'ஜகத்குரு' என்றால் அதில் பெரிய அந்தஸ்து இல்லை; ஜகத் முழுதும் அவருக்குச் சிஷ்யரானால், உலகில் உள்ள அத்தனை பாபமும் இந்த குருவிடமல்லவா வந்து சேருகிறது? அந்தப் பாபச் சுமை தீரவே சிஷ்யர்களை ஈசுவர ஸ்மரணத்தில் திருப்பப் பார்க்கிறோம். அப்படிச் செய்தால் கொஞ்சமாவது பாபம் நிவர்த்தியாகும். 'அவர்கள் கேட்காவிட்டால் அவர்களுக்கும் சேர்த்து நீங்கள் தியானம் பண்ணுங்கள்' என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்கள். அந்தக் கடமையைச் செய்யப் பிரயத்தனம் பண்ணி வருகிறோம். நீங்களும் எத்தனை நாழிகை பாத தியானம் பண்ணுகிறீர்களோ அவ்வளவு சௌக்கியம் உண்டாகும். அதற்கு அநுகூலமாகப் பல உபாயங்கள், புஸ்தகங்கள் இருக்கின்றன.

நாம் எவ்வளவு நாழிகை தியானம் பண்ணுகிறோம் என்று அனைவரும் தங்களைத் தாங்களே கேட்டுக் கொள்ளவேண்டும். தினந்தோறும் பல காரியங்களைச் செய்து வருகிறோம். ஆனாலும் ஈசுவரத் தியானம் கொஞ்சந்தான் செய்திருப்போம். வம்பு, பரிஹாஸம், பத்திரிகை படித்தல், அதன் மேல் அபிப்பிராயம் சொல்லுதல் (Comment) முதலிய காரியங்களில் காலம் செலவாகிறது. அப்படிச் செலவான காலமெல்லாம் ஈசுவரத் தியானத்தில் செலவழித்திருப்போமானால் இப்பொழுது பாப மூட்டைக்குப் பயப்பட வேண்டாம். இப்பொழுது மூட்டை வர வர ஏறிக்கொண்டே இருக்கிறது. நாம் பூலோகத்தில் வந்துவிட்டோம். இனி, யாராக இருந்தாலும் போயாக வேண்டும். இந்த லோகமானது பாபத்தைச் செய்கிற இடமாக இருந்தது போதும்; இனிமேல் இது பாபத்தை அலம்புகிற இடம் என்று ஆக்கிக் கொள்வோம். க்ஷேத்ரம், மலை, சாஸ்திரம், க்ஷேத்திரம், தீர்த்தம் முதலிய பல சௌகரியங்கள் இந்த உலகில்தான் இருக்கின்றன. நாம் வாக்கினாலும் மனத்தினாலும் கைகால் முதலியவற்றாலும் பாபம் செய்து இருக்கிறோம். அந்தப் பாபங்களையெல்லாம் வாக்கையும், மனசையும், அவயவங்களையும் கொண்டே புண்ணியம் செய்து கரைத்துவிட வேண்டும். நாம் இந்த உலகை விட்டுப் போவதற்குள் 'பாப மூட்டை இல்லை' என்று சொல்லும்படி செய்து கொண்டால் அப்புறம் பஞ்சைப் போல் ஆனந்தமாகப் பறந்து போகலாம். அப்பொழுது பயமே இராது. எங்கிருந்து புறப்பட்டோமோ அங்கேயே போய்ச் சேர்ந்து விடலாம். பரிபூரண சாந்தத்தில் ஆழ்ந்து விடலாம்.



# லஷ்மியின் விருப்பங்கள் பற்றிய ருசிகரமான தகவல்கள்

எழில் கொழிக்கும் லஷ்மியிடம், அவரது தற்கால விருப்பங்கள் சிலவற்றைப் பற்றிக் கேட்டோம். அவர் சிரித்துக் கொண்டே கூறியதாவது:

சித்தார்: அதன் மயக்கும் ஒலியினை நான் மிகவும் விரும்புகிறேன்.

வாசனைப் பொருள்கள்: மென்மையான அத்தர்.

ஞாயிற்றுக்கிழமை: வாரத்தில் நான் மிகவும் விரும்பும் கிழமை.

அவரது எழிலின் ரகசியத்தைப் பற்றிக் கேட்ட பொழுது அவர் புன்சிரிப்புடன் கூறினார். 'லக்ஸ்தான், எப்பொழுதுமே'

'எனது மேனியின் பாதுகாப்புக்கு நான் வேறெந்த சோப்பையும் நம்புவதில்லை. மென்மையான லக்ஸ்தான் எப்போதும் நான் விரும்புவது'.




இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு



# அலை ஓசை

## அமரர் கல்கி

### 3. ஆண்டு நிறைவில் அடிதடி

சிரஞ்சீவி பாலசுப்பிரமணியன் ஆண்டு நிறைவுக் கல்யாணம் மேள தாளத்துடன் சிறப்பாக ஆரம்பமாயிற்று. கல்யாண வீட்டில் எல்லாரும் மிக உற்சாகமாக இருந்தார்கள். இதற்கு முக்கிய காரணம் சூரியாவின் எதிர்பாராத வருகைதான். நெடுநாட்களாகப் பாராத பிள்ளையைப் பார்த்துக் கிட்டாவய்யரும் அவருடைய மனைவியும் ஆனந்தக் கடலில் மூழ்கினார்கள். லலிதாவின் குதூகலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. தன் கணவன் சிறைச்சாலையில் இருப்பதைக்கூட அவள் அன்றைக்கு மறந்து கல்யாண ஏற்பாடுகளில் உற்சாகமாக ஈடுபட்டு ஓடியாடிக் கொண்டிருந்தாள்.

லலிதாவின் மாமனார் ஆத்மநாதய்யருக்கு, சூரியாவின் வருகை காரணமாக எதிர் வீட்டுத் தாமோதரம் பிள்ளையுடன் மறுபடியும் பேச்சு வார்த்தை தொடங்கியது பற்றி மிகவும் சந்தோஷம் உண்டாயிற்று.

சூரியாவுக்கும் அன்றைக்கு என்றுமில்லாத உற்சாகம் ஏற்பட்டிருந்தது. அப்பா அம்மா முதலியவர்கள் தன்னை எப்படி வரவேற்பார்களோ என்று அவன் மனத்தில் ஏற்பட்டிருந்த சந்தேகம் நீங்கிற்று. அமரநாதன் தன்னுடைய சிநேகத்தை மறந்துவிடவில்லை யென்பதும் அவனுடைய தகப்பனார் தாமோதரம் பிள்ளைகூடத் தன்னுடன் சல்லாபமாகப் பேசியதும் அவனுடைய உற்சாகம் வளரக் காரணமாக இருந்தன. இது மட்டுமா? அவனுடன் பெரும் சண்டை போட்ட தமையன் கங்காதரன் இன்று அன்பாகப் பேசினான். ''சூரியா! அப்பாவுக்கு வயதாகி விட்டது. அவரால் பண்ணைக் காரியங்களைக் கவனிக்க முடியவில்லை. நானும் என் வேலையை விட்டுக் கிராமத்துக்குப் போய் இருப்பது முடியாத காரியம். நீதான் ராஜம்பேட்டைக்குப் போய் அப்பாவுக்கு ஒத்தாசையாக இருக்க வேண்டும். குடியானவர்கள் விஷயத்தில் உன் இஷ்டம்போல் எப்படி வேணுமானாலும் செய்துகொள். நான் ஆட்சேபிக்கவில்லை. ஐந்து வருஷங்கள் அலைந்தது போதும். பேசாமல் ஊருக்கு வந்துவிடு!'' என்று கங்காதரன் கூறியது சூரியாவுக்கு மிக்க ஆச்சரியத்தையும், மகிழ்ச்சியையும் அளித்தது. எல்லோரும் தன்னிடம் இவ்வளவு அன்பாக இருப்பது ஏன் என்று அடிக்கடி கேட்டுக் கொண்டான்.

எல்லாரும் ''சூரியா! சூரியா!'' என்று அவனைப் பிரமாதப் படுத்துவதைப் பார்த்துவிட்டு லலிதாவின் சீமந்த புத்திரி பட்டுவும் அவனுடன் அதி விரைவில் சிநேகமாகி விட்டாள். சூரியாவின் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டு வேறு யார் அழைத்தாலும் வரமாட்டேன் என்று அந்தக் குழந்தை பிடிவாதம் பிடித்தது.

இதனாலெல்லாம் சூரியா வெகு நாட்களாக அறியாத உற்சாகத்துடன் இருந்த சமயத்தில் காலை சுமார் எட்டு மணிக்கு வாசலில் தபால்காரர் வந்தார். தபால்காரருடைய குரல் சூரியாவுக்கு ஏற்கனவே கேட்ட குரலாகத் தொனித்தது. உடனே லலிதா, ''தெரியுமா, அண்ணா உனக்கு? தபால்கார பாலகிருஷ்ணன் இப்போது இந்த ஊருக்கு மாற்றலாகி வந்துவிட்டான்.

இந்த வீதிக்கு அவன்தான் இப்போது தபால் கொண்டு வந்து கொடுக்கிறான்'' என்றாள். அவள் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே ''இந்த வீட்டிலே கே. எஸ். நாராயணன் என்று யாராவது வந்திருக்கிறார்களா?'' என்று பாலகிருஷ்ணன் கேட்டது சூரியாவின் காதில் விழுந்தது.

உடனே சூரியா வீட்டுக்கு வெளியில் சென்று, ''என்ன பாலகிருஷ்ணா! சௌக்கியமா? என்னை நினைவு இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''ஓகோ! நீங்கதானா ஸார்? அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன். என்ன சேதி? என்ன சமாசாரம்? எப்போது வந்தீர்கள்? — இந்தக் கடிதம் உங்களுக்குத்தானா, பார்த்துச் சொல்லுங்கள்!'' என்று ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினான்.

விலாசம் தாரிணியின் கையெழுத்தில் இருப்பதைக் கண்டு சூரியா ஆவலுடன் அதை வாங்கி, ''ஆமாம், எனக்குத்தான்!'' என்றான்.

''ஓகோ! கே. சூரியநாராயணய்யர் என்ற பெயரை கே. எஸ். நாராயணன் என்று சுருக்கிக் கொண்டீர்களாக்கும்? நினைத்தேன்; நினைத்தேன்! லலிதா அம்மாளுக்குக்கூட ஒரு கடிதம் இருக்கிறது. அதையும் நீங்களே...'' என்று சொல்வதற்குள் லலிதா அங்கு வந்து சேர்ந்தாள். ''இந்தாங்க அம்மா! உங்களுக்கு ஒரு கடிதம். குழந்தைக்கு இன்றைக்கு ஆண்டு நிறைவுக் கல்யாணம் போலிருக்கிறது. ராஜம்பேட்டையிலே நடந்த கல்யாணம் நேற்று நடந்தது போல் இருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டே பாலகிருஷ்ணன் லலிதாவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். பிறகு சூரியாவைப் பார்த்து, ''ஸார்! மதகடியில் நாம் சண்டை போட்டோமே, ஞாபகம் இருக்கிறதா? கடிதத்தை நான் பிரித்துப் பார்த்து விட்டேன் என்று கோபித்துக் கொண்டீர்களே?'' என்றான்.

''அதைப் பற்றி இப்போது என்ன? எந்தக் காலத்திலோ நடந்தது!'' என்று சொன்னான் சூரியா.

''அதற்காகச் சொல்லவில்லை. இப்போது உங்களிடம் கொடுத்தேனே, அந்தக் கடிதத்தை நான் பிரித்துப் பார்க்கவில்லை யென்பதற்காகத்தான் சொன்னேன். தெரிகிறதா?''

சூரியா உடனே சந்தேகத்துடன் தன் கையிலிருந்த கடிதத்தை முன்னும் பின்னும் திருப்பி உற்றுப் பார்த்தான்.

பாலகிருஷ்ணன் புன்னகையுடன், ''என்ன ஸார், பிரித்துப் பார்த்திருக்கிறதா?'' என்று கேட்டான்.

''இல்லை!'' என்றான் சூரியா.

''அதற்காகத்தான் சொன்னேன். ஒருவேளை பிரித்துப் பார்த்திருந்தாலும் பிரித்தது நான் இல்லை. பழைய ஞாபகத்தை வைத்துக் கொண்டு என்பேரில் சந்தேகப் படாதீர்கள். தெரிகிறதா? லலிதா அம்மா! உங்கள் கடிதத்தையும் நான் பிரித்துப் பார்க்கவில்லை. மிஸ்டர் சூரியா பெரிய சந்தேகப் பிராணி ஆயிற்றே! அவர் என் பேரில் சந்தேகப் படக்கூடாது! நான் போய் வரட்டுமா?''



''போஸ்ட்மேன்! மத்தியானம் இங்கே வந்து சாப்பிட்டு விட்டுப் போகலாமே!'' என்றாள் லலிதா.

''அந்தக் காலம் மலையேறிப்போச்சு, இப்போ எனக்கும் குடும்பப் பாரம் சுமந்திருக்கிறது. மத்தியானம் வீட்டுக்குச் சாப்பிடப் போகாவிட்டால் நல்ல டோஸ் கிடைக்கும். சாப்பாடு கிடக்கிறது. அம்மா! மனசு நல்ல மனசாயிருக்க வேணும். அவ்வளவுதான்.. மிஸ்டர் சூரியா! உங்கள் கடிதத்தை நான் பிரித்துப் பார்த்ததாக எண்ணிக் கொள்ள வேண்டாம், தெரிகிறதா? என்ன லலிதா அம்மா! நான் சொல்கிறது என்ன?'' என்று சொல்லிக் கொண்டே பாலகிருஷ்ணன் நடையைக் கட்டினான்.

அவன் கொஞ்ச தூரம் போனதும் சூரியா லலிதாவைப் பார்த்து, ''பாலகிருஷ்ணனுடைய கிறுக்கு முன்னைவிட அதிகம் போலிருக்கிறதே! இப்படி உளறுகிறானே?'' என்றான்.

''அவன் ஒன்றும் உளறவில்லை, அண்ணா! அவனுக்குக் கிறுக்கும் இல்லை. பாலகிருஷ்ணன் சொன்னதின் அர்த்தம் உனக்குப் புரியவில்லையா?''

'' அவன் சொன்னதிலே அர்த்தம் வேறே இருக்கிறதா?'' என்று கேட்டான் சூரியா.

''ஏன் இல்லை? உனக்கு இது தெரியாதது ஆச்சரியமாயிருக்கிறது. வடக்கே யெல்லாம் ஒரு வேளை இந்த வழக்கம் கிடையாதோ என்னமோ? இவர் ஜெயிலுக்குப் போனதிலிருந்து எனக்கு வரும் கடிதங்களை யெல்லாம் பிரித்துப் பார்த்துவிட்டுத்தான் அனுப்புகிறார்கள். இதற்கு 'சென்ஸாரிங்' என்று பெயராம்....''

சூரியாவுக்குச் 'சுருக்' என்றது. மறுபடியும் கடிதத்தை முன் பின் திருப்பிப் பார்த்துவிட்டுத் தைரியமாக ''எனக்கு வந்திருக்கும் கடிதத்தை யாரும் பிரித்துப் பார்க்கவில்லை'' என்றான்.

''உனக்கு எப்படித் தெரியும், பிரித்துப் பார்க்கவில்லை யென்று? சில கடிதங்களைப் பகிரங்கமாகப் பிரித்துப் பார்த்து மேலே 'சென்ஸார் செய்யப்பட்டது' என்று சீட்டை ஒட்டிவிடு



வார்களாம். இன்னும் சில கடிதங்களைப் பிரித்தது தெரியாதபடி திருப்பி ஒட்டி விடுவார்களாம். எனக்கு இரண்டு வித மாகவும் வருவதுண்டு.''

''உன் அகத்துக்காரர் சிறையி லிருந்து உனக்கு எழுதும் கடிதங்களை அப்படி யெல்லாம் பிரித்துப் பார்த்து அனுப்பலாம். ஆனால், நான் இன்றைக்கு வந்தவன்தானே? என் கடிதத்தை எதற்காகப் பிரிக்கிறார்கள்?''

''அப்படி யில்லை அண்ணா! இந்த வீட்டு மேல் விலாசம் இருப்பதால் ஒரு வேளை பிரித்துப் பார்த்திருப்பார்கள். நீயும் அப்படி இலேசுப்பட்டவன் அல்லவே! என்னென்னமோ செய்துகொண்டிருக்கிறாய் அல்லவா? நமக்குப் பார்த்தால் உறை பிரிக்கப்பட்டதாகவே தெரியாது. ஆனால் பாலகிருஷ்ணனுக்குப் பார்த்தவுடனே தெரிந்து போய்விடும். அவன் சொன்னதிலிருந்து நம் இரண்டு பேருக்கும் வந்த கடிதங்களைப் பிரித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். எல்லாவற்றுக்கும் கடிதத்தைப் படித்துப் பார்க்கலாம்.''

இவ்விதம் சொல்லிக் கொண்டே லலிதா உறையைப் பிரித்தாள். உள்ளே யிருந்த கடிதத்தைப் பார்த்ததும் அவளுடைய முகம் மலர்ந்தது. ''இவர் தான் ஜெயிலிலிருந்து எழுதியிருக்கிறார்! குழந்தையின் ஆண்டு விழா அன்றைக்குச் சரியாக வந்து சேரும்படியாக எழுதியிருக்கிறார். அவர் மட்டும் இங்கே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும். நீ வந்ததற்காக எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார்'' என்றாள் லலிதா.

இதற்குள் உள்ளே யிருந்து அம்மா கூப்பிடும் குரல் கேட்கவே லலிதா வீட்டுக்குள் சென்றாள்.

சூரியாவும் தனக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். பிரிக்கும் போதே அவன் மனத்தி லிருந்த கலக்கம் அகன்றுவிட்டது. கடிதம் எழுதியிருப்பது தாரிணி. ஸி. ஐ. டி. போலீஸுக்கு உபயோகப்படக் கூடிய எந்த விஷயமும் அவள் எழுதியிருக்க மாட்டாள். புரட்சிக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் ஒருவருக்கொருவர் கடிதம் எழுதும்போது மனிதர்களின் உண்மைப் பெயர்களைக் கூடக் குறிப்பிடுவதில்லை. எல்லாருக்கும் மாறுபெயர்கள் இருந்தன. தாரிணிக்குச் 'சரித்திரம்' என்று பெயர். சூரியாவுக்குத் 'தூதன்' என்று பெயர். இப்படி யெல்லாம் முன் ஏற்பாடு செய்து கொண்டிருக்கும்போது ஸி. ஐ. டி. பிரித்துப் பார்த்து என்ன தெரிந்து கொள்ள முடியும்?

சூரியா எண்ணியது போலவே தாரிணியின் கடிதத்தில் போலீஸுக்கு உபயோகப்படக் கூடிய விஷயம் ஒன்றும் இல்லை. ஆனால் வேறுவிதக் கவலை சூரியாவுக்குத் தரக்கூடிய விஷயம் இருந்தது. தாரிணி வெகு சுருக்கமாகச் சில வரிகள்தான் எழுதி யிருந்தாள். ''அத்தங்காளின் நிலைமை முன்னை விட மோசமாக இருக்கிறது. உடம்பு, மனசு ஒன்றும் சரியாயில்லை. உங்களைச் சந்திக்க விரும்புகிறாள். கூடிய சீக்கிரம் வந்து சேரவும். நீங்கள் உடனே வந்து சேராவிட்டால் ஏதாவது விபரீதமாக முடியலாம். —சரித்திரம்

இந்தக் கடிதம் சூரியாவை ரொம்பவும் கலக்கி விட்டது. தென்னாட்டுக்கு எந்த வேலையை முன்னிட்டு வந்தானோ, அது பூர்த்தியாகி விட்டதாகச் சொல்வதற்கில்லை. ஆயினும் பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம் என்று திரும்பிப் போக வேண்டியதுதான். ஆகா! இது என்ன தொல்லை! நல்ல அத்தங்காள் வந்து சேர்ந்தாள், தன்னுடைய வேலையை எல்லாம் கெடுப்பதற்கு! அந்த மூர்க்கன் அவளுடைய — கணவன் இப்படியும் ஒரு மனிதன் உண்டா? சீதாவின் வாழ்க்கை எப்படி முடியப் போகிறதோ, தெரியவில்லையே?

ஆண்டு நிறைவுக் கல்யாணத்துக்காக வைதிகப் பிராமணர்களும் பந்துமித்திரர்களும் வரத் தொடங்கினார்கள். சூரியாவும் வீட்டுக்குள்ளே சென்றான். வைதிகக் காரியங்கள் ஆரம்பமாயின. வைதிகர்கள் வேத மந்திரங்களை ஓதினார்கள். ஸ்திரீகள் 'கௌரீ கல்யாணம்' பாடினார்கள். நாதஸ்வரக் கோஷ்டியார் ஜாம் ஜாம் என்று முழங்கினார்கள்.

சூரியாவும் சற்று நேரத்தில் மேற்படி வைபவங்களில் முழுதும் மனத்தை ஈடுபடுத்தினான். தான் வந்த காரியத்தையும் புதுடில்லி அத்தங்காளின் கஷ்டத்தையும் மறந்து விட்டான் என்றே சொல்லலாம்.

* * *

காலை மணி பத்தரை ஆயிற்று. தாமோதரம் பிள்ளை தம்முடைய ஆபீஸ் அறையில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தார். டெலிபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டு பேசினார். ''ஹலோ! தாமோதரம் பிள்ளை பேசுகிறது. போலீஸ் ஸ்டேஷனா? என்ன விசேஷம்? எதிர் வீட்டிலா?— ஓகோ? — நான் எதிர் வீட்டுப் பக்கம் எட்டிப் பார்க்கிறதுகூடக் கிடையாதே? உங்களுக்குத்தான் நன்றாகத் தெரியுமே? ...இல்லை, நான் பார்க்கவில்லை. தெரி

# அன்னத்தின் மென்னழகு மின்னிடும் உங்கள் முகத்தில்...

SKYLARK

மென்துகிலாய் பொலியும் போலிமி புடவைகள், ஜார்ஜெட்டுகள், நைலான்கள் சாதாரண மற்றும் பிரிண்டுகள் - போலிமி புடவைகள் - பெண்மைக்கனிக்கும் சீர் வரிசைகள். மதிமயக்கும் உடுப்புத் துணிகள் - ஆண்களுக்கும் பெண்களுக்கும் போலிமின் கைவரிசை.



**தி பாம்பே ஸில்க் மில்ஸ் லிட்.,**
இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், லால்பாக், பம்பாய்-12.

மெஸர்ஸ் G. I. மீர்பூரி, 137, பீமசேனு கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4
மெஸர்ஸ் ரமண்லால் D. ஷா, மெஜூட்டி பிரத்னலாத ராய் பில்டிங், இரண்டாவது மாடி
11-25, 15, கொத்தபேட், விஜயவாடா - 1
மெஸர்ஸ் KN. பரமசிவன், 108, தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை - 1
மெஸர்ஸ் யுனிவர்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன், தேவஸ்தா மார்க்கெட், சிக்பெட், பெங்களூர்-2A
சர்வோதயா கார்ப்பொரேஷன், 12, கைலாஸ் மார்க்கெட், செகந்திராபாத் - 3

# பச்சை நிற கோலினஸ் குளோரோபில் வாய் துர்-நாற்றத்தை வெல்லுகிறது.

**பச்சை நிற கோலினஸ் குளோரோபில் பற்பசையில் குளோரோபில் அடங்கியுள்ளது. பசும் இலைகளி-லிருந்து ஆக்கம் பெறும் குளோரோபில் இயற்கையாகவே துர்நாற்றம் போக்கும் தன்மையுடையது.**

பச்சை நிற கோலினஸ் பற்பசையால் பல் துலக்கி, அருவருப்பான வாய்நாற்றம் போக்குங்கள். அதன் புதுமையான 'மின்ட்' சுவையையும் வளமான நுரையையும் நீங்கள் ரசிப்பீர்-கள். இரவிலும் காலையிலும் பச்சைநிற கோலினஸ் குளோரோபில் பற்-பசையால் பல் துலக்குங்கள்.

## இந்த 'நட்பு மிக்க மூச்சு' சோதனையை நீங்களே செய்து பாருங்கள்.

உங்கள் வாய்க்கு அருகில் உள்ளங்கையைப் பிடியுங்-கள். அதன் மீது நீண்ட மூச்சு விடுங்கள். விரைவாக மூச்சை உள்ளுக்கு இழுங்-கள். பிறகு பச்சை நிற கோலினஸ் குளோரோபில் பற்பசையால் பல் துலக்குங்கள். சோதனையை மீண்டும் செய்து பாருங்கள். இப்போது உங்கள் மூச்சு தூய்மையுடன் இனிமையாக விளங்குவதைக் காண்பீர்கள்.




KC-8

**பச்சை நிற கோலினஸ் குளோரோபில்**

யாது!.... ஒன்றுமே தெரியாது!.... வாருங்கோ! வாருங்கோ! பேஷாய் வாருங்கோ! எல்லாத் தமாஷையும் என் வீட்டிலிருந்தே பார்க்கிறேன்!''

டெலிபோன் ரிஸீவரை வைத்தபிறகு தாமோதரம் பிள்ளை மேலே நோக்கிய வண்ணம் இரண்டு நிமிஷங்கள் யோசித்துக் கொண்டிருந்தார். பிறகு, ''அமரநாத்!'' என்று அழைத்தார்.

அமரநாத் அறைக்குள்ளே வந்தான். ''எங்கேயோ புறப்படுகிறாய் போல் இருக்கே?'' என்றார்.

''ஆம், அப்பா! நானும் சித்ராவும் எதிர் வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம். போகலாமல்லவா?''

''அவசியம் போகலாம் அமரநாத்! நீ எதிர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போவதில் எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. ஆனால் ஒரு விஷயத்தைப் பற்றி யோசிக்க வேண்டும்.''

''என்னத்தை யோசிக்கிறது? நானும் சித்ராவும் கட்டாயம் போகத்தான் போகிறோம். நியாயமாய்ப் பார்த்தால் நீங்கள்கூட வரலாம். எத்தனை நாளைக்குத்தான் மனத்திலே துவேஷத்தை வளரவிட்டுக் கொண்டிருக்கிறது?''

''கூடாது, கூடாது. துவேஷத்தை வளர விடவே கூடாது. உண்மையில் நான்கூடக் கல்யாணத்துக்கு வருவதாகத்தான் இருந்தேன். அதற்குள் ஒரு தடை குறுக்கிடுகிறது....!''

''அது என்ன தடை அப்பா?''

''உன் சிநேகிதன் சூரியாவைப் பற்றி இந்த ஊர்ப் போலீஸுக்கு ஏதோ தகவல் வந்திருப்பது போலத் தோன்றுகிறது....?''

''என்ன? என்ன?'' என்று திடுக்கிட்டுக் கேட்டான் அமரநாத்.

''ஆமாம், சூரியாவைப் பற்றி ஏதோ சி. ஐ. டி. தகவல் வந்திருக்கும் போல் இருக்கிறது. இப்போது டெலிபோனில் டி. எஸ். பி. என்னைக் கேட்டார். 'சூரியா' என்ற பையன் எதிர் வீட்டுக்கு வந்திருக்கிறது தெரியுமா? என்று கேட்டார்.''

''நீங்கள் என்ன சொன்னீர்கள்?''

'''எனக்கும் எதிர் வீட்டுக்கும்தான் ஜன்ம விரோதமாயிற்றே?' என்றேன். வீட்டு வாசலில் ஒரு புது இளைஞனைப் பார்க்கவில்லையா? என்று கேட்டார். அங்க அடையாளம் கூடச் சொன்னார். 'தெருவிலே நின்று கொண்டு வருவோர் போவோரை யெல்லாம் பார்ப்பது தான் எனக்கு வேலையா?' என்று நான் பதிலுக்குக் கேட்டேன்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன? சீக்கிரத்தில் போலீஸார் இங்கே வரப் போகிறார்கள். எதிர் வீட்டில் அமளி துமளிப் படும். இந்த நிலைமையில் நான் எப்படி எதிர் வீட்டுக்குப் போவது? என்னை அங்கே பார்த்தால் டி. எஸ். பி. யிடம்

## தர்ம ஸ்தாபனத்துக்கு நிதி உதவி

திருச்சி மாவட்டம், திருப்பராய்த்துறையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண குடில் என்பது தமிழக அநாதைச் சிறார்களுக்காகவே 1949ம் ஆண்டிலிருந்து சேவை செய்து வரும் தர்ம ஸ்தாபனம். காவிரி தென் கரையில் ஐம்பது ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. தாய் தந்தை இருவருமே இல்லாத திக்கற்ற ஏழைச் சிறுவர்களை ஏற்றுக் கொண்டு அவர்களுக்கு உணவு, உடை, இருப்பிடம், கல்வி, வைத்திய வசதி ஆகிய அனைத்தும் முற்றும் இலவசமாகவே வழங்கி, முதல் வகுப்பு முதல் எஸ். எஸ். எல். ஸி. வரை படிக்க வைத்து, அதற்கு மேல் அவரவர்கள் விருப்பப்படி நவீன தொழிற் பயிற்சிக் கல்வி வேண்டுமானாலும் கற்றுத் தேற வசதி செய்து வைக்கப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் நன்கொடைகள் மூலமே ஸ்தாபன நிர்வாகம் நடந்து வருகிறது. குடிலுக்கு 1974ம் ஆண்டில் வெள்ளி விழா வருகிறது. அதற்குள் ஒரு நிரந்தரமான மூலதன நிதியை ஏற்படுத்தி வைக்க வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. ஒரு குழந்தைக்கு ரூபாய் ஐயாயிரம் வீதம் முந்நூறு குழந்தைகளுக்குப் பதினைந்து இலட்சம்வரை நிதி திரட்டி, அதை அழிக்க முடியாத இருப்புத் தொகையாக வங்கியில் போட்டு வைத்து அதனுடைய வட்டியை மட்டும் வருடா வருடம் பெற்று நிர்வாகச் செலவுக்குப் பயன்படுத்திக் கொள்ள அவர்களுக்கு உத்தேசம். இதற்குத் ''திருவருள் இட்ட நிரந்தர மூலதன நிதி'' என்று பெயரிடப்பட்டு, திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் முதன் முதலில் இரண்டு குழந்தைகள் செலவை ஏற்றுக்கொண்டு ரூபாய் பத்தாயிரம் வழங்கி இத்திட்டத்தை ஆரம்பித்து வைத்திருக்கிறார். இந்த முறையில் இதுவரை சுமார் நான்கு இலட்சம் ரூபாய் வரை சேர்த்திருக்கிறது. இன்னும் இரண்டு ஆண்டுகளில் நிதி முழுதும் சேர்க்கத் திட்டமிட்டிருக்கிறார்கள்.

இந்த நல்ல தர்ம ஸ்தாபனத்துக்கு நன்கொடை அனுப்ப விரும்புபவர்கள் **'பிரம்மசாரி ராமசுவாமி,** தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண குடில், திருப்பராய்த்துறை போஸ்ட், திருச்சி' என்ற முகவரிக்கு அனுப்பலாம்.



''பார்டர் நன்றாக இருந்தால் புடவை நன்றாக இல்லை. புடவை நன்றாக இருந்தால் பார்டர் நன்றாக இல்லை. இரண்டும் நன்றாக இருந்தால் நீ சொல்கிற விலை நன்றாக இல்லை. விலையைக் குறைத்து நீ கொடுத்தாலும் புடவை எனக்குப் பொருத்தமாய் நன்றாக இராது. ஆக, எனக்கு என்ன பண்ணுவ தென்றே புரியவில்லை!''

---

நான் சொன்னது பொய் என்று ஏற்பட்டு விடுமல்லவா?''

''அப்பா! இப்போது என்ன செய்யலாம்? சூரியாவுக்கு ஓர் எச்சரிக்கை கொடுக்க வேண்டாமா?''

''அது உன் இஷ்டம். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். அப்புறம் உன் உசிதம் போலச் செய். ஒரு விஷயம், எச்சரிக்கை செய்வதாயிருந்தால் உடனே செய்ய வேண்டும். இன்னும் பதினைந்து நிமிஷங்களில் போலீஸ் படை இங்கே வந்துவிடும். சூரியாவை அரெஸ்ட் செய்து கொண்டு போனால் அவன் அறியாத உண்மைகளையெல்லாம் சொல்லும்படி செய்வார்கள். நம் ஊர்ப் போலீஸ்காரர்கள் எவ்வளவு மிருகத்தனமாக நடந்து கொள்வார்கள் என்று நீ கனவிலேகூட எண்ணியிருக்க முடியாது. தெரிகிறதா?''

''அப்பா! நீங்கள் சொல்லும்போதே எனக்கு மயிர்க்கூச்சல் உண்டாகிறது. ஆனால் சூரியாவுக்கு இப்போது வெறுமனே எச்சரிக்கை செய்து என்ன பிரயோசனம்? இன்னும் பதினைந்து நிமிஷங்களில் போலீஸார் வந்துவிடுவார்கள் என்று சொல்கிறீர்கள்? அதற்குள் அவன் எப்படித் தப்பிக்க முடியும்? எங்கே போய் ஒளிந்து கொள்வான்?''

''இதையெல்லாம் என்னைக் கேட்டு என்ன பயன்? நீயும் உன்னுடைய சிநேகிதனும் எப்படியாவது போங்கள். திடீரென்று அவன் எப்படி ஒளிந்து கொள்வான்? அக்கம்பக்கத்தில் யாராவது உதவி செய்தால் தான் தப்பித்துக் கொள்ளலாம்!''

''அப்பா! மன்னித்துக் கொள்ளுங்கள். சூரியாவுக்கு இந்த வீட்டில் அடைக்கலம் கொடுக்கலாமா?''

''மறுபடியும் என்னைக் கேட்கிறாயே? இந்த வீட்டில் எனக்கு எவ்வளவு பாத்தியதை உண்டோ அவ்வளவு உனக்கும் உண்டு. உன்னிஷ்டம்போல் செய். மேலே மாடியில் பின்கட்டு அறையில் போட்டுப் பூட்டிச் சாவியை வேணுமானாலும் காணாமல் அடித்துவிடு! ஆனால் உன் இஷ்டம். என்னை இந்த விஷயமாக ஒன்றுமே கேட்க வேண்டாம். தெரிந்ததா?''

மறு நிமிடம் அமரநாத் வெளியேறி எதிர் வீட்டுக்குச் சென்றான். ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் சூரியாவைக்கூட்டிக்கொண்டு திரும்பினான். மேல் மச்சுக்கு அழைத்துப் போய்த் தகப்பனார் சொற்படி பின்கட்டு அறையில் அடைத்துக் கதவைப் பூட்டினான்.

* * *

சில நிமிஷங்களுக்கெல்லாம் வீதியில் தடதடதடவென்று மோட்டார் சைக்கிள் வரும் சத்தம் கேட்டது. மோட்டார் சைக்கிளுடன் ஜீப் ஒன்றும் வந்தது. வீதியின் இருபுறங்களிலிருந்தும் போலீஸார் 'மார்ச்' செய்து கொண்டு வந்தார்கள். கைதிகளைப் போட்டு அடைத்துக்கொண்டு போகும் இரும்புக் கூண்டு போட்ட போலீஸ் வண்டி ஒன்றும் வந்தது.

ஆத்மநாதய்யரின் வீட்டு வாசலிலும் கொல்லையிலும் போலீஸ் ஜவான்கள் நின்று கொண்டார்கள். அப்புறம் சிறிது நேரம் கூச்சலும் குழப்பமுமாக இருந்தது.

வைதிகப் பிராமணர்கள் மந்திரம் சொல்வதை நிறுத்திவிட்டு வெளியில் ஓடி வந்தார்கள். அவர்களையெல்லாம் குண்டாந்தடியால் அடித்துப் போலீஸார் வீட்டுக்குள் விரட்டினார்கள். ''யாரையும் வெளியில் விட வேண்டாம்!'' என்று ஒரு பெரும் அதிகாரக் குரல் உத்தரவிட்டது.

ரேழியில் உட்கார்ந்திருந்த நாதஸ்வரக்காரர்கள் வெளியேறப் பார்த்தார்கள். அதன் பயனாகத் தவுல் வாத்தியம் இரண்டு பக்கமும் படார் என்று கிழிந்தது. நாதஸ்வரக் குழாயும் ஒத்து வாத்தியமும் நொறுங்கின. ஜாலராத் தாளங்கள் சுக்குநூறாயின.

போலீஸ் உத்தியோகஸ்தர்கள் வீட்டுக்குள்ளே பிரவேசிக்கப் பார்த்த போது கிட்டாவய்யர் வந்து வாசற்படியில் நின்றார். தம்முடைய பிள்ளையைப் பிடிக்கத்தான் வந்திருக்கிறார்கள் என்று ஒருவாறு தெரிந்து கொண்டார்

போதும். பையன் வெளியேறிவிட்டான் என்பது அவருக்குத் தெரியாது. ஆகையால் கையைக் கட்டிக்கொண்டு கம்பீரமாக நின்று, ''உள்ளே வைதிக காரியம் நடக்கிறது. ஒருவரும் நுழையக் கூடாது. அப்படி நுழைந்தால் என் செத்த உடம்பை மிதித்துக் கொண்டுதான் போக வேண்டும்!'' என்றார். அவர் சொல்லி வாய் மூடுவதற்குள் மண்டையில் ஓர் அடி, கழுத்தில் ஒரு கல்தா.

ஆத்மநாதய்யர் முன்வந்து, ''ஏன் ஸார், இவ்வளவு தடபுடல் செய்கிறீர்கள்? சாவதானமாகப் பரிசோதனை செய்து யார் வேண்டுமோ அவரைக் கொண்டு போங்கள். யாரும் தடுக்கவில்லை. வீணாகப் பெண்பிள்ளைகளைப் பயமுறுத்த வேண்டாம்'' என்றார். ஆத்மநாதய்யருடைய சாந்தமான பேச்சின் பலனாக அவருக்கு மண்டையில் இரண்டு அடி கிடைத்தது.

அவ்வளவுதான்; போலீஸார் தடதடவென்று வீட்டுக்குள்ளே பிரவேசித்தார்கள். முன்கட்டிலும் பின்கட்டிலும் மேல் மாடியிலும் ஒவ்வொரு அறையாகப் புகுந்து தேடினார்கள். காலில் தட்டுப்பட்டதை யெல்லாம் உதைத்துத் தள்ளினார்கள். கையில் அகப்பட்டதை யெல்லாம் உடைத்து நொறுக்கினார்கள். எதிரில் தட்டுப்பட்டவர்களைப் பிடித்துத் தள்ளினார்கள். அல்லது தடியால் அடித்தார்கள். படுக்கை அறைக்குள்ளே புகுந்து மெத்தை தலையணைகளைப் பிய்த்து எறிந்தார்கள். சாமான் அறைக்குள்ளே புகுந்து சட்டிபானைகளை உடைத்தார்கள். சமையல் கட்டுக்குள்ளே பிரவேசித்து அடுப்பிலே கொதித்துக் கொண்டிருந்த சாம்பார்ப் பாத்திரத்தில் குண்டாந்தடியை விட்டுத் துளாவிப் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் தேடி வந்த ஆசாமி எங்கேயும் அகப்படவில்லை.

வீட்டு ஸ்திரீகள் இன்னது செய்வது என்று தெரியாமல் அழுது கொண்டே அங்குமிங்கும் ஓடினார்கள். குழந்தைகள் 'கோ'வென்று கதறினார்கள்.

இதற்குள் ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுந்து வந்த கிட்டாவய்யர், ''எதற்காக எல்லோரும் இப்படிக் கூச்சல் போடுகிறீர்கள்? எல்லோரும் பேசாமல் இருங்கள். நடக்கிறது நடக்கட்டும்! பகவான் ஒருவர் இருக்கிறார்'' என்று சத்தம் போட்டுக்கொண்டிருந்தார்.

முதலில் போலீஸார் தாங்கள் தேடி வந்த ஆசாமி கங்காதரனே என்று எண்ணி அவனைப் பிடித்து நாலு அடி கொடுத்தார்கள். ஆனால் அவனுடைய தலையில் வைத்திருந்த கட்டுக் குடுமி புரட்சிக்காரன் அவன் இல்லை என்பதை நிரூபித்தது. பிறகு அவனை விட்டுவிட்டார்கள்.

அநாவசியமாக அடிபட்ட கங்காதரன், ''எனக்கு அப்போதே தெரியும்! நான் சொன்னால் யார் கேட்கிறார்கள்? அந்தக் காலிப் பயலை வீட்டுக்குள்ளேயே விடக் கூடாது என்று சொன்னேனே கேட்டீர்களா? அருமைப் பிள்ளை என்று என்று செல்லம் கொஞ்ச ஆரம்பித்து விட்டீர்கள். அவன்தான் சனீசுவரனுடைய அவதாரம் ஆயிற்றே? வரும் போதே சங்கடத்தையும் கூட அழைத்துக் கொண்டு வருவானே!'' என்று இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தான்.

போலீஸார் வீடு முழுவதும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தும் பயனில்லை. தேடிய ஆசாமி அகப்படவில்லை. மேலே, கீழே, அறைக்குள்ளே அலமாரிக்குள்ளே, அரிசி மூட்டைக்குள்ளே, சாம்பார் பாத்திரத்துக்குள்ளே மெத்தை, தலையணைக்குள்ளே — எங்கேயும் அவனைக் காணவில்லை. தரையிலே சுரங்க அறை ஏதேனும் இருக்குமோ என்று சில போலீஸ் ஜவான்கள் குண்டாந்தடியால் தட்டிக்கூடப் பார்த்தார்கள். அதிலும் பயனில்லை. அரை மணி நேர அமர்க்களத்துக்குப் பிறகு போலீஸ்காரர்களுக்குத் திரும்பிப் போக உத்தரவு பிறந்தது.

* * *

**தா**மோதரம் பிள்ளை தம்முடைய வீட்டு வாசலில் வந்து நின்று எதிர் வீட்டில் நடந்த அமர்க்களத்தை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார். பார்க்கப் பார்க்க அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

வந்த காரியம் பயன்படாமல் போலீஸ்காரர்கள் வெளியில் வந்ததையும் அவர் பார்த்தார். அவர் தம்முடைய சிநேகிதர் டி. எஸ். பி.யின் அருகில் சென்று, ''இன்று நீங்கள் செய்த காரியம் எனக்கு வெட்கத்தை உண்டாக்குகிறது. இந்தப் பஞ்சாங்கப் பிராமணர்களை இப்படித் தடியால் அடித்ததில் உங்களுக்கு என்ன திருப்தி? இந்தச் சூரத்தனத்தை யெல்லாம் ஜப்பானியரிடம் அல்லவா காட்ட வேண்டும்?'' என்றார்.

''மிஸ்டர் பிள்ளை! நீங்கள் விஷயம் தெரியாமல் பேசுகிறீர்கள். 'ஸாபோடாஜ்' கோஷ்டியைச் சேர்ந்த ஒரு பையன் இந்த வீட்டுக்கு வந்திருந்ததாகத் தகவல் கிடைத்தது. காவேரிப் பாலத்தை வெடி வைத்து இடிக்கச் சதியாலோசனை நடந்திருக்கிறது....

''ஆமாம், காவேரிப் பாலத்தைப் இடித்து விட்டார்கள். போங்கள் ஸார்! அவர்களுடைய மூளையைச்சொல்கிறதா? உங்களுடைய அதிகார அக்கிரமத்தைச் சொல்கிறதா? இப்படி யெல்லாம் செய்து தானா இராஜாங்கத்திடம் விசுவாசத்தை வளர்த்துவிட முடியும்? ... சரி! தேடிய பையன் அகப்பட்டானா?''

''பையன் இந்த வீட்டில் இல்லை. ஆனால் இந்த டவுனிலேதான் இருக்கிறான். எப்படியும் பிடித்துவிடுவோம்'' என்றார் டி. எஸ். பி.

மோட்டார் சைக்கிளும் ஜீப்பும் குண்டாந்தடிப் போலீஸாரும் ஏக ஆர்ப்பாட்டத்துடன் அவ்விடத்திலிருந்து புறப்பட்டுச் சென்றன.

ஆத்மநாதய்யரின் வீட்டுக்குள்ளே லலிதாவின் விம்மல் சத்தம் கேட்டது.

அத்துடன் அவளுடைய இரண்டு குழந்தைகளின் அழுகைச் சத்தமும் கலந்தது.

இவ்வாறு சிரஞ்சீவி பாலசுப்பிரமணியன் ஆண்டு நிறைவுக் கல்யாணம் சிறப்பாக முடிவடைந்தது. (தொடரும்)













**ஜாங்கோ ஜக்கு** சித்திரத் தொடர் அடுத்த வாரம் ஆரம்பம்.

'டெரீன்'® வழங்கும் பரவசமூட்டும் பல டிசைன்களைப் பற்றியும் 'டெரீன்' துணிவகைகளின் ஈடிணையற்ற பண்புகளைப் பற்றியும் லட்சக்கணக்கானவர்களின் கருத்தும் இதுவே.

இப்பொழுது 'டெரீன்' இன்னும் பல வாய்ப்புக்களை வழங்கப்போகிறது. இன்னும் அதிக பரவசமூட்டும் டிசைன்களிலும், வண்ணங்களிலும், நெசவுப் பாணிகளிலும், மேலும் தீவிரமான தரக் கட்டுப்பாடுகளுக்கேற்ப தயாரிக்கப்படும் தலைசிறந்த துணி வகைகளை வழங்கப் போகிறது.

இப்பொழுது, 'டெரீன்' போலவே முதன்மையில் இருக்கும், தரத்தில் நாட்டமுடைய, தேர்ந்தெடுத்த மில்களிலிருந்து, பிரத்யேகமான 'டெரீன்' துணி வகைகள் உங்களுக்கு வரும்.

'டெரீன்'—சிறந்த மில்களுடன்...சிறந்த துணிவகைகளின் மீது'

# 'டெரீன்'—அற்புதமானது!'

® 'டெரீன்' கெமிகல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்டின் ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க் ஆகும்

# நஷ்டக் கணக்கு நாராயணன்

எம். எஸ். பெருமாள்

ஹெட்மாஸ்டரின் காதில் நாராசமாகப் பாய்ந்தது.

நஷ்டக் கணக்கு நாராயணனின் வகுப்பறையைத் தாண்டிப் போகும் போது அவர் செவிப்பறையைத் தாக்கியது அந்தக் கணக்கு:

"ஐயாயிரம் ரூபாய் கடன் வாங்கி முதலீடு செய்து ஆரம்பித்த வியாபாரத்தில் முதல் வருடம் ஆயிரத்து இருநூறு ரூபாயும் இரண்டாம் வருடம் ஆயிரத்து எழுநூறு ரூபாயும் மூன்றும் வருடம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பது ரூபாயுமாக நஷ்டம் ஏற்பட்டால் அந்த வியாபாரியின் மொத்த நஷ்டம் எவ்வளவு ? வருஷத்துக்கு அறுநூறு ரூபாய் வீதம் ஐயாயிரம் ரூபாய்க்கு மூன்று வருடங்களுக்கு ஆகும் மொத்த வட்டித் தொகை எவ்வளவு ?"

—இந்தக் கணக்கை நான் இங்கே எழுதியிருப்பதைப் போல் நாராயணன் சார் சொல்லவில்லை. அப்படிச் சொல்ல அவருக்குத் தெரியவும் தெரியாது. வாரியார் கதை சொல்லுகிற பாணியில் அவ்வளவு சுவாரசியமாக அனுபவித்து அபிநயித்துக் கணக்கைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஹெட்மாஸ்டருக்கு அதற்குமேல் அங்கிருக்கப் பிடிக்கவில்லை. நஷ்டமே வராமல் கணக்கைச் சொல்லிக் கொடுக்கும் நல்ல குணம் என்றைக்குத்தான் வரப் போகிறதோ இந்த நாராயணனுக்கு என்று எண்ணியபடி தம் அறைக்குப் போய்ச் சேர்ந்தார்.

அந்தப் பள்ளிக்கூடத்தின் கணக்குவாத்தியார் நாராயணனின் பெயரே 'நஷ்டக் கணக்கு நாராயணன் சார்' என்பதுதான். கணக்குப் பாடத்துக்கு அவர் கொடுக்கிற உதாரணங்கள் அந்த அளவுக்குப் பிரசித்தம். கூட்டலாகட்டும், கழித்தலாகட்டும்—ஐயோ, கடன் வாங்கிக் கழித்தல் என்றால் இன்னும் விசேஷம் — பெருக்கலாகட்டும், வகுத்தலாகட்டும், ஒரு வியாபாரிக்கோ தென்னந்தோப்புச் சொந்தக்காரனுக்கோ, சர்க்கரை ஆலை முதலாளிக்கோ அல்லது சர்க்காருக்கே தானே லட்சக்கணக்கில் நஷ்டம் வந்தாக வேண்டும். அப்படி நஷ்டம் வரும்படி சொல்லிக் கொடுக்காவிட்டால் அவருக்குப் பாடம் நடத்தியதாகவே தோன்றாது. தண்டச் சோறு தின்றுவிட்டுத் தர்மத்தைக் குலைத்ததாக வேதனைப்படுவார் !

ராமா

மாணவர்கள் கணக்கைப் போடத் தொடங்கிய நேரத்தில் அவருடைய கவனம் முழுதும் சற்றுமுன் வட்டிக்குக் கடன் வாங்கி முதலீடு செய்து வியாபாரத்தை ஆரம்பித்த அந்த அப்பாவியின் பேரேட்டில் எத்தனை ஆயிரம் நஷ்டம் வந்திருக்கிறது, எவ்வளவு வட்டித் தொகை ஏறிப் போயிருக்கிறது என்ற புள்ளி விவரங்களை எத்தனை மாணவர்கள் சரியாகப் போட்டிருக்கிறார்கள் என்பதை அறிவதிலேயே இருந்தது.

''போட்டேளாடா? இத்தனை நாழி, 'டிலே' பண்ணிண்டிருந்தா வட்டித் தொகை ப[illegible]ன்னு ஏறிப் போய்டும்!''

— அதிலேயும் அவருக்கு ஒரு குறை; கூட்டு வட்டியாக இல்லாமல் தனி வட்டிக் கணக்காகப் போய்விட்டதே என்ற ஆதங்கம்!

''ஆறாயிரத்து அறுநூற்றி அம்பது சார்!'' என்றான் பகபதி.

''எப்படி?'' — அவருக்கே பிரமிப்பு, ஐயாயிரம் ரூபாய் முதலீட்டில் மூன்றே வருடங்களில் ஆறாயிரத்துச் சில்லறை நஷ்டம் வர முடியுமா? முதலே மூழ்கிப் போய்விட்டதா? பேஷ்! பேஷ்!

பகபதி போட்டிருந்த கணக்கைச் சரிபார்த்தார். அதன் பிறகே அவருக்கு ஆறாயிரத்து அறுநூற்று ஐம்பது ரூபாய் நஷ்டம் சரியான விடைதான் என்ற தீர்மானம் விழுந்தது.

''கரெக்ட்!''

பையன்களுக்குக் கூட்டல் சொல்லித் தர லாபம் வருகிறாற்போல் ஏதேனும் கணக்குக் கிடைக்கவில்லையா என்று கேட்டால் சீறுவார்.

''ஆமாம்யா.... பசங்களுக்கு மூணு வருஷத்திலே முப்பதினாயிரம் லாபம் வந்துடும்னு ஆசை காட்டினா இன்னிக்கே படிப்பை விட்டுட்டு வட்டிக்கடை வைக்கப் போய்டுவானுகள். இப்படியெல்லாம் நஷ்டம் வரும், முதலே மூழ்கிப் போய்டும்னு தெரிஞ்சுகண்டாலுகன்னுதான் படிக்கிற படிப்பிலே



பயமும் பக்தியும் இருக்கும். அது கெடக்கட்டும், என் கற்பனையிலே வர்ற வியாபாரிக்குத்தானே நஷ்டம் வர்றது. உமக்கேன் எரியறது?'' என்று வாயடி அடித்துவிடுவார்....

## பெருக்கல்

''ஏழும் வாய்ப்பாடு தெரியுமாடா....? பதிமூணு மூணு எத்தனை?''

''முப்பத்தொம்பது சார்!''

''கணக்கை எழுதிக்கங்கோ.... நம்ம ஸ்கூல் தோட்டத்துலே ஒரு செடிக்கு மூணு சொத்தைக் கத்திரிக்காய் வீதம் பதினேழு செடியிலேயும் வீணாகப்போகிற கத்திரிக்காய் மொத்தம் எத்தனை....? ஒரு செடிக்கு ஆறு பூ வீதம் மத்தாநான் கார்த்தால வாடிப் போய்க் கெடக்கிற மல்லிப்பூ — நம்ம தோட்டத்துலே எத்தனை மல்லிச் செடி மொத்தம்?''

''எட்டு சார்!''

''வாடிப் போய்க் கெடக்கிற மல்லிப்பூ மொத்தம் எத்தனை?''

இது கணக்கு!

நாலு காய் காய்க்கிற கத்திரிச் செடியில் மூன்று சொத்தையாய்க் கிடந்தால் தங்கள் உழைப்பெல்லாம் விழலுக்கிறைத்த நீராகத் தானே போகிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்க அந்த மாணவர்களுக்குத் தெரியவுமில்லை; தெரிந்து கொள்ளும் அக்கறையும் இல்லை. அவர்கள் கவனமெல்லாம் 3 × 17 எத்தனை, 6 × 8 எத்தனை.... இதில்தான் அடங்கியிருந்தது.

எல்லோருமே கணக்குப் புத்தகத்தை வைத்துக் கொண்டுதான் பாடம் நடத்துவார்கள். நாராயணன் சாருக்குத் தம் கற்பனை, கைச் சரக்கு இரண்டுமே போதும்.

## வகுத்தல்

''அடுத்த கணக்கைக் கவனிக்கறேளா? வகுத்தல் கணக்கு.... கவனிங்கோ.... பன்னிரண்டாயிரம் பேர் இருக்கிற நம்ப ஊர்லே— கரெக்டா பன்னிரண்டாயிரம்னு இருக்க முடியுமா, வகுத்த கணக்கு ஒதைக்கப்படாதுன்னு தான் ரௌண்டா ஒரு ஃபிகர் — பன்னிரண்டாயிரம் பேர் இருக்கிற நம்ப ஊர்லே, பன்னிரண்டிலே அஞ்சு பங்கு படிப்பு வாசனை இல்லாததுகள்.... ஆறில் ஒரு பங்கு ஜென்மாந்திரச் சீக்கு!....''

இப்படியே போகும் வகுத்தல் கணக்கு. அந்த ஊரிலே இவாள் கேஸ்கள் எத்தனை.





நோயாளிகள் எத்தனை, நொண்டி முடம் எத்தனை, தற்குறிகள், எத்தனை தறுதலைகள் எத்தனை.... எத்தனை.... இது கேள்வி !

பன்னிரண்டாயிரத்தைப் பன்னிரண்டால் வகுத்தால் இத்தனை, மூன்றால் வகுத்தால் இத்தனை என்ற விடைகளை வரவழைக்கத் தான் இந்தக் கேள்வி.

தப்பு தவறுமாகப் போராடி, 'நூத்தி ஏழேகால் பேர்', 'இருநூத்திப் பதினொன்றரை ஆட்கள்' என்றெல்லாம் மாணவர்கள் வகுத்தல் கணக்கிலே வாதுபட்டுக் கொண்டிருந்தார்கள்....

கழித்தல் கணக்குக்கு என்ன உதாரணம் தரலாம் என்பது பற்றி நாராயணன் சார் சற்றே சிந்தித்துக் கொண்டிருக்கும் போது அவருடைய நாலாவது மகன் மைத்ரேயன் அலறிப் புடைத்துக் கொண்டு வகுப்புக்குள் வந்து விழுந்தான்.

''என்னடா, பேய்க் கோலம்? என்ன வந்துடுத்து?''

''அம்மா ஒன்னெ கையோட கூட்டிண்டு வரச் சொன்னா. கிட்டு மாமா...ராமண்ணா, கந்து... ராதாக்கா எல்லாரும் அடிபட்டு ஆஸ்பத்திரியிலே கெடக்கிறாளாம்... அம்மா ஆஸ்பத்திரிக்குத்தான் போயிண்டிருக்கா'' என்றான் விசும்பலுடன்.

''மானிட்டர் கிளாஸைப் பார்த்துக்கோடா'' என்று அந்த அவசரத்திலும் தம் கடமையை மறக்காமல் பொறுப்பை மானிட்டரிடம் ஒப்படைத்துவிட்டு வெளியே பாய்ந்தார் நாராயணன் சார்.

காலையில் அவருடைய மைத்துனன் கிருஷ்ணன் காரிலே கூட்டிக் கொண்டு போன தம் மூத்த செல்வங்கள் மூன்றும் இப்போது விபத்துக்கு உள்ளாகி உயிருக்குப் போராடிக் கொண்டிருக்க நேரிடும் என்பதைக் கொஞ்சம் கூட அவர் எதிர்பார்க்கவில்லையே....!

## கழித்தல்

ஆசிரியர் பாதி வகுப்பில் வெளியே போனால் மானிட்டர்தான் வகுப்பைப் பார்த்துக் கொள்ள வேண்டும். பாடத்தைத் தொடரவும் அனுமதி உண்டு. அதுதான் வழக்கம்.

மானிட்டர் கணக்கைச் சொல்லத் தொடங்கினான்:

''நம்ம நாராயணசாமி சார் நமக்குச் சதா நஷ்டக் கணக்கே கொடுத்துக் கொண்டிருந்தாலும் வாழ்க்கையிலே அவர் நஷ்டமடையலேன்னே வைச்சுப்போம். அவருக்கு மொத்தப் பிள்ளைகள் ஆறு. வீட்டிலே சுகமா இருக்கிறவா மூணு. ஆக அசம்பாவிதமா எதும் நடக்காமே ஆசுபத்திரியிலேயிருந்து சீக்கிரமாக் குணமடைஞ்சு திரும்ப வேண்டியவா எத்தனை பேர்? இது மனக் கணக்கு!''

''ஆறில் மூணு போனா மிச்சம் மூணு. ரொம்ப ஈஸிடா!'' பட்டென்று பதில் சொன்னான் ஒரு பையன்.

ஹெட்மாஸ்டரிடம் நடந்ததைக் கூறி ஆஸ்பத்திரி செல்ல அனுமதி பெற்றுத் திரும்பிக் கொண்டிருக்கையில் வகுப்பறையைத் தாண்டி வந்த நாராயணன் காதின் செவிப்பறையைத் தாக்கியது இந்தக் கணக்கு! இல்லை மனக் கணக்கு! தமக்கு நஷ்டம் ஏற்படக் கூடாது என்று ஆசைப்பட்ட சிறுவர்களின் மனம் போட்ட கணக்கு அது!

அதுவரையில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லித் தந்த நஷ்டக் கணக்கு நாராயணன் சார் அன்றுதான் தமக்கேற்ற பாடம் கற்றுக் கொண்டார்.





ALBO-SANG
FOR POORLY AND IMPROPERLY NOURISHED BABIES AND ADULTS






SALOFEN

பார்க் - டேவிஸ்

# மூவகை ஆற்றலுள்ள நிகோ சோப்

## மற்றெந்த சோப்பையும் விட உங்கள் சருமத்திற்கு மிகுந்த பாதுகாப்பளிக்கிறது

**1** நிகோ சருமக் கிருமிகளைக் கொல்லுகிறது

**2** நிகோ உடல் துர்நாற்றத்தைப் போக்குகிறது

**3** நிகோ உடலைத் துப்புரவாக்கிப் பாது காப்பளிக்கிறது

நீங்கள் ஆரோக்கியமான சருமத்தைப் பெற, நாள்தோறும் நிகோ சோப் தேய்த்துக் குளியுங்கள். நிகோவின் நச்சுநாச நுரைவளம் சரும நோய்க் கிருமிகளைக் கொன்று, உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. நிகோவிலுள்ள மருந்துப் பொருள்கள் வியர்வையினால் ஏற்படும் துர் நாற்றத்தைப் போக்குகின்றன. நிகோ சின்னஞ்சிறிய சருமத் தொற்றுகளையும் எதிர்த்துப் போராடி, சருமத்துக்கு மென்மையளிக்கிறது. அதோடு மினுமினுப்பும் புதுமையும் தருகிறது. இது மட்டுமல்ல;

நிகோ பழக்கத்தைக் கடைப்பிடிப்பீர். அது உங்கள் சருமத்திற்கு அவசியம்.

முகப் பருக்கள் மற்றும் வேர்க்குருவிலிருந்தும் உங்கள் சருமத்துக்குப் பாதுகாப்பு தருகிறது நிகோ. ஷாம்புவாகக்கூட இதைப் பயன்படுத்தலாம். இதனால் பொடுகு விழாமல் தடுக்கிறது நிகோ. எனவே, இன்று முதலே, நிகோ சோப் உபயோகிக்கத் தொடங்குங்கள்.

TRIPLE ACTION

**NEKO®**

The Original Antiseptic Soap








பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும்
பாதி வேலையைத்தான் செய்யும்
இன்க்ரிமின் பெறுவீர்.. உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்
சேருவீர் இன்க்ரிமின் இனத்தோடு...
வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் வளமுடனே!
பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரத சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில அடங்கியுள்ளது.
Lederle எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன
இன்க்ரிமின்* டானிக்
பெரிய குழந்தைகளுக்கு இரும்புச் சத்து அடங்கிய இன்க்ரிமின் ஸிரப் — 175 மி.லி & 57 மி.லி.
இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ்–10 மி.லி.
Incremin drops
10 ml.
* அமெரிக்கன் ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.
லின்டாஸ் - INC. 20.690 TM

# சத்திய வெள்ளம்

## நா. பார்த்தசாரதி

### பதின்மூன்றாவது அத்தியாயம்

பொதுக்கூட்டம் நடந்த இடத்தருகே மேட்டில் மரங்களின் மறைவிலிருந்து கல்லெறிந்தவர்களில் பெரும்பாலோர் தப்பி ஓடி விட்டனர். மாணவர்களால் துரத்திப் பிடிக்கப்பட்ட சிலர் போலீஸார் வசம் ஒப்படைக்கப் பட்டனர். கூட்டத்தைக் கலைக்க முயன்றவர்களின் சதி பலிக்கவில்லை. 'மணவாளனின் மேல் இனி ஒரு கல்கூட விழக்கூடாது, என்று தடுக்கும் ஆவலில் அவனைக் காக்கும் கவசம் போல் மறைத்துக் கொண்டு நின்றார் அண்ணாச்சி. கல்லெறிய வந்தவர்கள் விரட்டப்பட்டபின் மீண்டும் அமைதி நிலவியது.

அப்போது அண்ணாச்சி மேடையிலிருந்து கீழே இறங்கிக் கொண்டார். மணவாளன் மீண்டும் பேசத் தொடங்கினார். அவர் பேசி முடித்தவுடன் மேடையில் வந்து விழுந்த கற்களை ஒன்று திரட்டி ஏலம் விட்டபோது அந்தக் கற்கள் மட்டுமே முந்நூறு ரூபாய்க்கு ஏலம் போயின. கற்களை ஏலம் விட்டுக் கொண்டிருக்கும்போதே அண்ணாச்சி அடிபட்டு ஆஸ்பத்திரியில் கிடக்கும் தம் கடைப் பையனைப் பார்ப்பதற்குப் போய்விட்டார். பேசி முடித்ததும் மணவாளனை அழைத்துப் போய் எதிர்த்தாற்போல் மருந்துக் கடையை ஒட்டியிருந்த மலையாளி டாக்டர் ஒருவரிடம் காட்டி நெற்றிக் காயத்துக்கு மருந்து போட்டு 'டிரெஸ்' செய்து கொண்டு வந்தார்கள் மாணவர்கள். மண்டையில் காயத்தின்மேல் துணிக்கட்டுடன் பத்திரிகை போட்டோவுக்காக நிருபர் ஒருவர் வந்து மணவாளனைப் புகைப்படம் எடுத்துக் கொண்டு போனார்.

சூறையாடப்பட்ட அண்ணாச்சி கடையைப் புதுப்பித்துக் கொடுப்பதற்காகக் கூட்டத்தில் வசூலான தொகையை உடனே எண்ணிக் கூட்டத்திலேயே அறிவிக்க முடியாமல் இருந்தது. எறியப்பட்ட கற்களை ஏலம் விட்ட முந்நூறு ரூபாய் தவிர மூன்று துண்டுகள் நிறைய ரூபாய் நோட்டுக்களும், சில்லறைகளுமாக நிரம்பியிருந்தன. கூட்டம் கலைந்த பின்னும் அதை எண்ணி முடிக்க வெகு நேரம் ஆயிற்று. பெரும்பாலான மாணவர்கள் பல்கலைக் கழக விடுதிகளுக்குத் திரும்பி விட்டாலும் நூறு மாணவர்கள் எண்ணுகிறவர்களுக்குக் காவலாக மேடையைச் சூழ்ந்து கொண்டு இரவையும் குளிரையும் பொருட்படுத்தாமல் நின்றார்கள்.

இரவு பதினொன்றேகால் மணிக்கு மொத்த வசூல் 'ரூபாய் ஆறாயிரத்து எண்ணூற்று ஐம்பத்திரண்டு' என்று பாண்டியன் மணவாளனிடம் கணக்குச் சொன்னான். அப்போதுதான் அண்ணாச்சியும் அடிபட்ட கடைப் பையனைப் பார்த்துவிட்டு ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பினார். மாணவர்கள் சார்பில் அந்தத் தொகையை மணவாளன் அண்ணாச்சியிடம் கொடுத்தபோது முதலில் அவர் மறுத்தார். அப்புறம் மாணவர்களும், மணவாளனும் வற்புறுத்தி அவர் அதை ஏற்கும்படி செய்தனர். மறுநாள் காலையிலேயே கடையைப் புதுப்பிக்கும் ஏற்பாடுகளில் முனைந்தார் அவர்.

வெற்றி விழாவுக்கு அடுத்த நாள் காலையிலேயே துணைவேந்தர் அவசர அவசரமாக ஓரியண்டேஷன் நாளைத் தொடங்கி வைத்துப் பேசினார். அன்று மாலைதான் மணவாளனும் மல்லிகைப் பந்தலிலிருந்து ஊர் திரும்பினார். காலையில் துணைவேந்தரின் ஓரியண்டேஷன் நாள் சொற்பொழிவு முடிந்ததுமே பாண்டியன் முதலிய நூற்றுக்கணக்கான மாணவர்கள் மணவாளனை வழியனுப்பி விடை கொடுக்கக் கூடி விட்டனர்.

மணவாளன் ஊர் திரும்பியதற்கு அடுத்த நாள் காலையிலிருந்து தேர்தல் புயல்களும் போட்டிகளும் மறைந்து மறந்து படிப்பில் கவனம் செலுத்தத் தொடங்கினார்கள் மாணவர்கள். மணவாளனே போகும்போது 'இனிமேல் படிப்பில் தீவிரமாகக் கவனம் செலுத்துங்கள்' என்றுதான் அறிவுரை கூறிவிட்டுப் போயிருந்தார். நாட்கள் விரைந்தன. செப்டம்பரில் பாரதி விழா வந்து போயிற்று. பல்கலைக் கழக நாடகப் பிரிவு மாணவ மாணவிகள் பாரதியாரின் பாஞ்சாலி சபத நாடகத்தை நடித்தனர். கண்ணுக்கினியாள் பாஞ்சாலியாக

நடித்து அனைவருடைய பாராட்டுதல்களையும் பெற்ருள். அக்டோபர் இரண்டாம் தேதியன்று காலை காந்தியடிகளின் ஜெயந்தி நாளன்று அவருக்கு அஞ்சலி செலுத்துவதற்காகப் பல்கலைக் கழக ஆடிட்டோரியத்தில் மாணவர்கள் கூடியிருந்தார்கள். பாதிக் கூட்டம் நடப்பதற்குள்ளேயே மருத்துவக் கல்லூரி விடுதியைச் சேர்ந்த மேரி தங்கம் என்ற மாணவி ஒருத்தி தற்கொலை செய்து கொண்ட செய்தி பரவிக் கூட்டம் கலைந்தது. ஏற்கெனவே திருமணமான விரிவுரையாளர் ஒருவர்தான் இந்தத் தற்கொலைக்கு மூலகாரணம் என்று தெரிய வந்ததும் எல்லாப் பிரிவு மாணவர்களும் அந்த விரிவுரையாளரின் இராஜிநாமாவைக் கோரி ஒன்று திரண்டனர். தேர்வுகள் தள்ளிப் போடப்பட்டுக் காலாண்டு விடுமுறைக்காக முன் கூட்டியே பல்கலைக் கழகத்தை மூடச் செய்து விடுதிகளைக் காலி செய்யுமாறு மாணவர்களுக்கு உத்தரவு இட்டார் துணைவேந்தர். சம்பந்தப்பட்ட விரிவுரையாளர் ஒரு மந்திரிக்கு நெருங்கிய உறவினர் என்பதால் அவர்மேல் நடவடிக்கை எடுக்க அஞ்சிப் பல்கலைக் கழகத்தை மூடினார்களே தவிர அமைதிக்காக மூடவில்லை என்பது எல்லா மாணவர்களுக்கும் புரிந்துதான் இருந்தது. துணைவேந்தரும், டாக்டர்களும், அதிகாரிகளும், போலீஸாரும் மந்திரிக்காக எவ்வளவுக்கு எவ்வளவு மூடி மறைக்க முயன்ருர்களோ அவ்வளவுக்கவ்வளவு எல்லா உண்மைகளும் வெளியாகிப் பரவிவிட்டன. தற்கொலை செய்து கொண்ட மாணவியின் பிரேதத்தைப் பரிசோதனை செய்தபோது அவள் கருவுற்றிருந்தது தெரிய வந்தது. நிச்சயமாக அதற்கு அந்த விரிவுரையாளரே காரணம் என்று அவளே எழுதி வைத்திருந்த கடிதம் ஒன்று மாணவர்கள் கையில் சிக்கியிருந்தது. அந்த விரிவுரையாளர் மேல் நடவடிக்கை எடுக்கப் பயந்து எல்லாரும் ஒதுங்கிவிட்டதாகத் தெரிந்தது. பல்கலைக் கழகத்தை மூடி விடுதிகளைக் காலி செய்யச் சொல்லி விட்டால் மறுபடியும் திறந்துகொள்ளும் போது எல்லாரும் எல்லாவற்றையும் மறந்து விடுவார்கள் என்று துணைவேந்தர் நினைப்பதாகத் தோன்றியது. உண்மையை மறைப்பதற்குத் துணைவேந்தரும் மற்றவர்களும் மேற்கொண்ட தீவிரம்தான் மாணவர்களின் சந்தேகத்தையும் கோபத்தையும் வளர்த்தன.

அக்டோபர் இரண்டாம் தேதியன்று காலையில் மருத்துவக் கல்லூரி விடுதியை ஒட்டியிருந்த ஏரியில் அந்தப் பெண்ணின் பிரேதம் மிதந்தபோது அநேகமாக எல்லா மாணவர்களும் மாணவிகளும் ஆடிட்டோரியத்தில் காந்தி ஜெயந்திக்காகக் கூடியிருந்தார்கள். பயமும், பதற்றமும் அடைந்த பல்கலைக்கழக நிர்வாகமும், போலீஸும் ஆர்.டி.ஓ.வும் உடனே 'போஸ்ட்மார்ட்டம்' முதலிய கண் துடைப்புக்களைச் செய்து பெற்ருேர்களுக்குத் தகவலும் அறிவிக்காமல் தாங்களே பிரேதத்தை அடக்கம் செய்தும் முடித்து விட்டார்கள். பிரேதப் பரிசோதனை ரிப்போர்ட்டில் 'தண்ணீரில் தவறி விழுந்து நேர்ந்த மரணம்' என்று அறிவித்திருந்தார்கள். ஆனல் பிரேதப் பரிசோதனையின்போது உடன் இருந்த இளம் டாக்டர் ஒருவர் மூலம் அவள் கருவுற்றிருந்தாள் என்பதையும், தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதையும் மாணவர்கள் அறிய முடிந்தது. இந்தச் சம்பவம் மாணவர்களிடையே கொந்தளிப்பை ஏற்படுத்தியிருந்தது.

எம். பி. பி. எஸ். இறுதி ஆண்டு மாணவி யாகையினால் தனி அறையில் இருந்திருக்கிருள். முந்திய தினம் மாலையில் அவளுடைய அறை பூட்டப்பட்டுப் பூட்டிலேயே சாவி தொங்கியிருக்கக் கண்டு பக்கத்து அறை மாணவி ஒருத்தி ஏதோ சந்தேகப்பட்டு அறையைத் திறந்து பார்க்கும் போது மேஜை விளக்கு எரிந்து கொண்டிருந்ததாம். அதனருகில் ஒரு காகிதமும் அது பறந்து விடாமல் இருக்குமோ என்னவோ அதன் மேல் பேனா வைக்கப்பட்டிருந்ததாம். அந்தக் காகிதத்தை இவள் படித்திருக்கிருள். படித்தவள் தன் சிநேகி



தியின் மானத்தைப் பறையறைய அந்தக் கடிதம் காரணமாயிருக்க வேண்டாம் என்று கருதியோ என்னவோ அந்தக் கடிதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியேறித் தன்னால் முடிந்தவரை முடிந்த இடங்களில் அவளைத் தேடிப் பார்த்திருக்கிறாள். அவள் கிடைக்கவில்லை. பயத்தினால் யாரிடமும் இதை அந்தப் பக்கத்து அறை மாணவி வெளியிடவில்லை. ஆனால் அக்டோபர் இரண்டாம் தேதி பிற்பகலில் பல்கலைக் கழக மாணவர் பேரவைத் தலைவன் மோகன்தாஸை இரகசியமாகச் சந்தித்து நடந்ததைச் சொல்லி, சிநேகிதியின் அறையில் தான் எடுத்த கடிதத்தையும் கொடுத்து விட்டாள் அந்த மாணவி. அந்தக் கடிதம் இறந்தவள் தற்கொலை செய்துகொண்டுதான் இறந்தாள் என்பதையும், குற்றவாளியான விரிவுரையாளர் அவளிடம் எல்லை மீறி நடந்து கொண்டு அவள் வாழ்க்கையைப் பாழாக்கியதால்தான் அவள் தற்கொலைக்குத் துணியும்படி ஆயிற்று என்பதையும் தெளிவாக நிரூபிப்பதாக இருந்தது.

தனிமையில் குற்றம் செய்வதற்குக் கூசாத மனிதர்கள் தாங்கள் செய்த குற்றங்கள் பொதுவில் நிரூபணமாகிவிடுமோ என்ற நிலை வரும்போது மட்டும் கூசிக் கூசித் தவிப்பது விந்தைதான். மந்திரிவரை செல்வாக்கு உள்ள அந்த விரிவுரையாளரின் வீட்டுக்குப் பலத்த போலீஸ் பாதுகாப்புப் போடப்பட்டிருந்தது. மருத்துவக் கல்லூரிப் பெண்கள் விடுதியைச் சுற்றியும் போலீஸ் பாதுகாப்புப் போடப்பட்டு, யாருக்கும் உள்ளே அனுமதி மறுக்கப் பட்டது. விடுதிகளிலிருந்தும், பல்கலைக் கழக எல்லையிலிருந்தும், மாணவர்களை வெளியேற்றிவிட்டுப் போலீஸைக் கூப்பிட்டுக் குடியேற்றி யிருந்தார் துணைவேந்தர். மந்திரிக்குச் சொந்தக்காரரான ஒழுக்கமற்ற ஒரு விரிவுரையாளரைக் காப்பாற்றுவதற்காக மேலும் பல ஒழுங்க





''யாரப்பா உள்ளே? 'எல்' போர்டை ஏன் தலைகீழாக மாட்டி இருக்கே?''

---

கலைத் தவறவிட்டிருந்தார் துணை வேந்தர். போலீஸை வைத்து மிரட்டி நிர்ப்பந்தப்படுத்தி அக்டோபர் இரண்டாந் தேதி மாலை ஆறு மணிக்குள் எல்லா மாணவர்களையும், மாணவிகளையும் பல்கலைக் கழக எல்லையிலிருந்தும், விடுதிகளிலிருந்தும் வெளியேற்றிவிட்டார்கள்.

மலைக் குளிரில் தங்க இடமும் கிடைக்காமல் உடனே ஊர் திரும்ப அத்தனை ஆயிரம் பேர்களுக்குப் போக்குவரவு வசதிகளும் இன்றி மாணவர்கள் தெருவில் நின்றார்கள். மல்லிகைப்பந்தல் நகரின் ஓட்டல்கள், தங்கும் விடுதிகள், ஒய். எம். ஸி. ஏ. கட்டிடம், ஒய். எம். ஐ. ஏ. கட்டடம், தேசிய இளைஞர் சங்க அலுவலகம், எஸ்டேட் தொழிலாளர் யூனியன் கட்டிடம், அண்ணாச்சி கடை, எல்லாவற்றிலும் மாணவ மாணவிகள் நிரம்பி வழிந்தனர். விடுதி வசதிகளைத் திடீரென்று ரத்துச் செய்து ஆயிரக் கணக்கில் மாணவர்களை வெளியில் துரத்தியதால் நகரின் நிலைமைகள் பாதிக்கப்பட்டன. உணவுக் கடைகள், சாப்பாட்டு ஓட்டல்கள் திணறின. யாத்திரீகர்கள் நிறைய வரக் கூடிய மாதங்களான ஏப்ரல், மே முதலிய கோடைக் கால மாதங்களில் அதிகமான ஓட்டல்களைத் திறந்திருப்பதும், மற்ற மாதங்களில் ஓட்டல்கள், சாப்பாட்டுக் கடைகளின் எண்ணிக்கை குறைந்துவிடுவதும் மல்லிகைப்பந்தல் நகரின் நடைமுறை ஆகும். திடீர் என்று ஓர் அக்டோபர் மாத ஆரம்பத்தில் பல்கலைக் கழகத்தை மூடி, விடுதி வசதிகளையும் இல்லாமல் செய்துவிட்ட கொடுமையால் குளிக்க வெந்நீர் வசதி இல்லாமல் தங்க இடம் இல்லாமல், உணவில்லாமல் எதிர்பாராத நிலையில் உடனுக்குடன் கைக்காக கொடுத்துச் சாப்பிடப் பண வசதியும் இல்லாமல், மாணவர்கள் நடுத் தெருவில் நின்று தவித்தார்கள். பெற்றோர்களுக்குத் தந்திகள், கடிதங்கள், டிரங்க்கால்கள் பறந்தன.

இந்த நிலையில் அண்ணாச்சி மாணவர்களுக்கு உதவியாகத் தம் கடைக்குப் பின்புறம் இருந்த சிலம்பக் கூடத்தை மறைத்துக் கீற்றுக் கொட்டகை போட்டு ஒரு தற்காலிகமான 'மெஸ்'ஸையே நடத்த நேர்ந்தது. கல்யாணங்களுக்குப் பாத்திரம் வாடகைக்கு விடும் ஒரு கடையில் பாத்திரங்கள் எடுத்து இரண்டு சமையற்காரர்களையும் ஏற்பாடு செய்து மாணவர்களைச் சோற்றுக்கு அலைய விடாமல் காப்பாற்றினார் அண்ணாச்சி. கடையின் பின்புறம் மாணவர்களும், மாணவிகளும் ஐம்பது ஐம்பது பேராகச் சாப்பிட்டு விட்டு, வெளியேற இட வசதி செய்யப்பட்டிருந்தது. ஒரு பந்தி முடிந்து அடுத்த பந்தி வந்து அமர்வதற்குள் இலைகளை எடுத்து இடத்தைப் பெருக்கிப் புதிய இலைகளைப் போட்டுப் பரிமாறி உபசரிக்கக் கண்ணுக்கினியாள் தலைமையில் பத்துப் பன்னிரண்டு மாணவிகள் சுறுசுறுப்பாகப் பணியாற்றினர்.

அவர்கள் பரிமாறிய அன்பையும் மலர்ச்சியையும் பார்த்து, ''நீங்கள் எல்லோருமே ஹோம் ஸயின்ஸ் மாணவிகளோ என்று சந்தேகமாக இருக்கிறது. உங்களுக்கு மிகவும் நன்றி கூற வேண்டும்'' என்றான் ஒரு மாணவன். இதைக் கேட்டுக் கண்ணுக்கினியாள் சிரித்து விட்டுச் சொன்னாள்: ''இல்லை! இதில் ஒருவர் கூட ஹோம் ஸயின்ஸ் மாணவி கிடையாது. நான் 'தியேட்டர் ஸயின்ஸ்' படிக்கிறேன். மற்றவர்கள் எல்லாருமே 'ஆர்ட்ஸ்' பிரிவு மாணவிகள். ஒருவேளை 'ஹோம் ஸயின்ஸ்' மாணவிகள் பரிமாற வந்திருந்தால் அவர்கள் அனைவருமே 'தியேட்டர் ஸயின்ஸ்' பிரிவோ என்று உங்களுக்குச் சந்தேகம் வந்திருக்கலாம்! சந்தேகங்கள் எப்போதுமே இப்படித்தான். அவை முதலிலேயே சரியாயிருப்பதில்லை. அல்லது முடிவிலே சரியாயில்லை என்று நிரூபிக்கப்படுகின்றன.''

அவள் அப்போது சாப்பிட்டுக் கொண்டிருந்த மாணவர்களிடம் இப்படி உரையாடியபடியே பரிமாறிக் கொண்டிருந்த வேளையில் பாண்டியனும், மோகன்தாஸும் வேறு சில மாணவர்களும் அண்ணாச்சி கடை முகப்புக்குக் கூட்டமாக வந்தார்கள். அவர்களில் பாண்டியன் மட்டும் முகப்பிலிருந்தபடியே கீற்றுப் படலை விலக்கி உள்ளே தலையை நீட்டி, ''ஒரு நிமிஷம் இப்படி வந்துவிட்டுப் போயேன். உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டும்''







# வெண்மையிலும் வெண்மை. நியூட்ரல் கருநிறம். தத்ரூபமான வண்ண நயம். பெரிய எக்ஸ்போஷர் விரிவெல்லை. படல மூட்டம் படியாமை.

பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மென்டுகளுக்கும் எப்போதுமே குறிப்பிட்டுக் கேளுங்கள் ஆக்பா-கேவார்ட் தாள்களே. மறவாதீர்கள் மட்ட ரகப் புகைப்படத் தாள்களை உபயோகித்தால் எத்தனை எடுப்பான புகைப்படமும் அடியோடு மங்கிவிடும். ஆக்பா-கேவார்ட் புகைப்படத் தாள்களோ கண்நிறைவான புகைப் படங்களைத் தட்டாமல் தரும். பளிச்சென்ற தெள்ளத் தெளிவாக எடுப்புடன் படங்கள்.

ஓபெக்ஸ்—எவ்வித நெகட்டிவ்களிலிருந்தும் கனகச்சிதமான பிரிண்டுகளைப் பெறுவதற்கான தொடர்புத் தாள்.

ப்ரொவிரா—சிறிய கைஸ் பிரிண்டுகளில் ஒளிந்துள்ள புகைப்பட அழகுகளை எல்லாம் வெளிப்படுத்தும் என்லார்ஜிங் தாள் இது.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும். ஆக்பா-கேவார்ட் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்பவர்கள்: நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பம்பாய்.






ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**

பம்பாய் - நியூ டெல்லி - கல்கத்தா - சென்னை.

புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆண்ட்வேர்ப்/லிவர்குஸன் ஆ




SIMOES/AG/5 Tam

# உங்கள் கேசம் உதிரத் தொடங்கினால் அல்லது பொடுகு விழுந்தால்

## அதை உடனே நிறுத்துங்கள்!

உற்ற தருணத்தில் கவனித்தால், கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கலாம் என்று ஆழ்ந்த பரிசோதனைகள் நிரூபித்துள்ளன.

**கேசம் உதிரக் காரணம்**

கேசத்தின் ஆரோக்கியம் அதன் வேர்களை—மயிர்க்கால்களை-பொறுத்துள்ளது. வேர்களுக்கு அருகிலுள்ள பாகங்கள் உயிரற்றுப் போனாலும், ரத்தவோட்டம் நின்றாலும் வேர்களுக்கு அவசியமான ஊட்டம் கிடைப்பதில்லை.




அடிக்கடி கேசத்தை சீவினாலும், சோப் போட்டுக் கழுவினாலும், கேசம் பெருமளவில் உதிருகின்றது. கேசம் உதிர்வதற்கு இதுவே அறிகுறி.

**ஆபத்தான பொடுகு விழாமல் காத்துக் கொள்ளுங்கள்:**

பொடுகு விழுவதைப் புறக்கணிப்பதால்தான் கேசம் உதிரத் தொடங்குகிறது.

**கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கப்பயனுள்ள வழி**

20 ஆண்டுகளுக்கும் மேலாக எஃப். ஹாப்மன்லா ஆய்வுக்கூடத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நடத்தி, பாந்தினால் என்னும் ஓர் அற்புதமான ஊட்டப் பொருள் கண்டுபிடித்துள்ளார்கள். அந்த ஊட்டப் பொருள் உயிரற்ற செல்களுக்குப் புத்துயிரூட்டுகிறது. இந்த பாந்தினால் கொண்ட பான்டீன் விரைவிலேயே மேலை நாடுகளில் உச்ச விற்பனையுள்ள கேச டானிக்காக விளங்கி விட்டது.

பாந்தினால் கொண்ட பான்டீன் அவசியமான எல்லா மூன்று பாகங்களிலும் செயல் புரிகிறது. (அ) வேர்களின் அருகிலுள்ள பாகத்துக்குப் புத்துயிரூட்டி, போஷாக்கு அளிக்கிறது. இதனால் கேசம் உதிர்வது நின்று விடுகிறது. (ஆ) மண்டைத் தோலை சுத்தம் செய்கிறது; நோய்க் கிருமிகளைக் கொல்லுகிறது; கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. (இ) மயிர்க்கால்களுக்குப் புத்துயிரளித்து, கேசத்திற்குப் பளபளப்பூட்டுகிறது.

மண்டைத் தோல்
கேசம்
மயிர்க் கால்கள்
பான்டீன் புரியும் செயல்↓

**பான்டீனின் வெற்றியின் இரகசியம்-நாள்தோறும் உபயோகியுங்கள்**

பான்டீன், மற்ற சாதாரண டானிக்குகளைப் போலன்றி, இலேசாகவும் பிசுக்கற்றும் உள்ளது. இது மண்டைத் தோலுக்கு அடியில் இறங்கி செயலாற்றுகிறது. இதனால் மயிர்க்கால்களுக்கு ஊட்டம் கிடைக்கிறது.

கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்க சிறந்த வழி, நாள்தோறும் பான்டீன் உபயோகிப்பது.

**பான்டீன்—கேசத்திற்கு அவசியமான டானிக், உன்னத அலங்கார சாதனம்**

பான்டீன் ஒன்றுதான் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட கேச டானிக். இது கேசத்திற்கு ஊட்டமளிப்பதோடு, உலகின் பிரபல கேச அலங்கார சாதனங்களில் ஒன்றாகவும் விளங்குகிறது. பான்டீன் உபயோகியுங்கள்; கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்.




# பான்டீன்

கேசத்திற்கு ஸ்விட்ஜர்லாந்தின் வைட்டமின் ஃபார்முலா-இந்தியாவில் கிடைக்கிறது.

பிசுக்கற்ற 'எண்ணெ கொண்ட ஃபார்முலா

Creative Unit

என்று கண்ணுக்கினியாளை அருகிலே கூப்பிட்டான்.

''ஹோம் ஸயின்ஸ் முடிகிறது. ஒயேட்டர் ஸயின்ஸ் இதோ ஆரம்பமாகப் போகிறது'' என்று சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு மாணவன் மற்றொரு மாணவனின் காதருகே குறும்பாக இதைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தபோதே, கண்ணுக்கினியாள் பரிமாறிக் கொண்டிருந்த தூக்கு வாளியை வேறொருத்தியிடம் கொடுத்து விட்டுப் பாண்டியனைப் பின்தொடர்ந்து கடை முகப்புக்கு வந்தாள். வருவதற்கு முன் கண்ணையும், பாண்டியனையும் இணைத்து அங்கே சாப்பிட்டுக் கொண்டிருந்த மாணவர்கள் குறும்பாகப் பேசிய சொற்கள் அவள் காதிலும்தான் கேட்டன. ஆனால் அந்தச் சொற்களை அவள் தவறாக எடுத்துக் கொள்ளவில்லை. 'குறும்பு என்பது இளமையின் செல்லப் பிள்ளை. எந்த நிலையிலும் அவர்களால் குறும்பை விட்டுவிட முடியாது. அவர்கள் பிறரையும் குறும்பு செய்வார்கள். பிறர் குறும்புகளையும் ஏற்றுக் கொள்வார்கள்' என்றெண்ணியபடி அச்சொற்களைச் சுபாவமாக எடுத்துக் கொண்டு போய்ச் சென்றாள் அவள். ஏனெனில் தானே அப்படிக் குறும்புகளைச் செய்த வேளைகள் அப்போது அவளுக்கு நினைவு வந்தன. கண்ணுக்கினியாள் வெளியே வந்ததும் பாண்டியன் அவளிடம் கேட்டான்:

''உடனே பல்கலைக் கழகத்தைத் திறக்கக் கோரியும், தற்கொலை செய்து கொண்ட மாணவி மேரி தங்கம் விஷயமாகப் பகிரங்க விசாரணை செய்யக் கோரியும் நாளைக் காலையிலிருந்து பல்கலைக் கழக வாயிலில் உண்ணாவிரதம் தொடங்குகிறோம். உண்ணாவிரதத்தில் கலந்துகொள்ள என் தலைமையில் என்னைத்தவிர இன்னும் ஐந்து மாணவர்கள் பேர் கொடுத்திருக்கிறார்கள். மாணவர்கள் சார்பில் நாங்கள் ஆறு பேர் உண்ணாவிரதம் இருக்கப் போகிறோம். மாணவிகள் சார்பில் நீயும் இன்னும் ஐந்து பேரும் உண்ணாவிரதம் இருக்க வேண்டும். நீ உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்பதை நானே முடிவு செய்துவிட்டேன். உன்னைத் தவிர இன்னும் ஐந்து பேர்களை மட்டும் பத்து நிமிஷங்களுக்குள் நீ முடிவு செய்து என்னிடம் சொல்ல வேண்டும்.''

''அதுசரி! என் விஷயமாக என்னைக் கேட்காமல் நீங்களே எப்படி முடிவு எடுக்கலாம்? என்னைப் பட்டினி போட நீங்கள் யார்?''

''நான் யாரா? ஆளைப் பார்... நான்தான் உன்னுடைய சர்வாதிகாரி... பட்டினி போட்டால் உனக்கும் நல்லது தான். பெண்கள் இளைத்து ஒல்லியாகப் பூங்கொடி போல் இருக்க வேண்டும் என்பார்கள்...''

''நான் பூங்கொடி போல் இல்லாமல் வேறு எப்படி இருக்கிறேனாம்...?''

''கண்ணாடியில் போய்ப் பார்த்துக் கொள், தெரியும்.''

''உங்களைப் பார்த்த பின்புதான் கண்ணாடியில் பார்ப்பதையே நான் விட்டு விட்டேனே...?''

''அப்படியானால் நான் சொல்வதை மறு பேச்சுப் பேசாமல் உடனே ஒப்புக் கொள்.''

''உத்தரவு!''

தன் அரும்பு முல்லைப் பற்களில் அவன் உள்ளத்தைக் கிறங்க அடிக்கும் சிரிப்போடு ஒரு தாளும் பேனாவும் வாங்கிக்கொண்டு மாணவிகளைச் சந்தித்துப் பேர் கேட்க உள்ளே சென்றாள் அவள். ஐந்து பேர்கள்தான் அவளுக்கு வேண்டியிருந்தது. ஆனால் அவளுடைய முகராசியின் விளைவாகப் பதினொரு மாணவிகள் உண்ணாவிரதத்துக்குப் பேர் கொடுக்க முன்வந்தார்கள். அந்தப் பதினொரு பேரில் அவளே ஐந்து பேரைத் தேர்ந்தெடுத்து உடனே முடிவு செய்து பாண்டியனிடம் அறிவித்தாள். பாண்டியன் அப்போதே அந்தப் பட்டியலையும் உண்ணாவிரத அறிவிப்பையும் எழுதி நோட்டீஸ் அச்சிடுவதற்கு அண்ணாச்சியிடம் கொடுத்து அனுப்பினான். காரியங்கள் வேகமாக நடந்தன.

பின்னால் ஒரு நீதி விசாரணை என்று வந்து விட்டால் அப்போது காண்பிப்பதற்குச் சரியான சாட்சியமாக இருக்கும் என்பதால் தன்னிடம் கிடைத்த மேரி தங்கத்தின் கடிதத்தை மிக மிக இரகசியமாகப் பாதுகாக்கச் சொன்னாள்



## சத்திய வெள்ளம்

தனிமையில் குற்றம் செய்வதற்குக் கூசாத மனிதர்கள் தாங்கள் செய்த குற்றங்கள் பொதுவில் நிரூபணமாகி விடுமோ என்ற நிலை வரும்போது மட்டும் கூசித் தவிப்பது விந்தைதான். □

சோதனையிட்டுப் போலீஸார் அந்தக் கடிதத்தைத் தன்னிடமிருந்து பறித்து விட நேருமோ என்ற முன்னெச்சரிக்கையின் காரணமாக அந்தக் கடிதத்தை அண்ணாச்சியிடம் கொடுத்து வைத்திருந்தான் அவன். அந்தக் கடிதம் மோகன் தாஸுக்கும், அதை அவனிடம் கொடுத்த பக்கத்து அறை மாணவிக்கும், பாண்டியனுக்கும் அண்ணாச்சிக்கும் மட்டுமே தெரிந்த இரகசியமாக இருந்தது.

தற்கொலை செய்து கொண்ட மாணவியின் பெற்றோர் நிலக்கோட்டை என்ற ஊரில் இருந்தார்கள். அவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினராயிருந்து கிறிஸ்தவ சமயத்துக்கு மாறியவர்கள். தந்தை தாய் இருவருமே பஞ்சாயத்து யூனியன் நடுத்தரப் பள்ளி ஒன்றிலே செகண்டரி கிரேடு ஆசிரியர்களாக இருந்தனர். அக்டோபர் மூன்றும் தேதி காலை அவர்கள் இருவருமே மல்லிகைப்பந்தலுக்கு வந்திருந்ததாகவும், குய்யோ, முறையோ என்று கதறி அழுதுவிட்டுப் போனதாகவும் தெரிய வந்தது. ஆனால் அந்தப் பெற்றோர்கள் பிறரையோ, பிறர் அந்தப் பெற்றோர்களையோ சந்திக்க முடியாமல் போலீஸ், ஆர்.டி.ஓ., துணைவேந்தர் எல்லாருமே கெடுபிடி பண்ணி எல்லாவற்றையும் மறைத்திருந்தார்கள். 'மேரி தங்கத்துக்குத் தூக்கத்தில் நடக்கும் வியாதி உண்டு என்றும் தூக்கத்தில் நடக்கும் பழக்கத்தால் அவள் தண்ணீரில் தவறி விழுந்து இறந்தாள் என்றும் அவள் பெற்றோர் ஒப்புக்கொண்டு கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டதாகவும், 'விசாரணை எதுவும் தேவையில்லை' என்றும் அவர்களே ஒப்புக் கொண்டு விட்டதாகவும் செய்திகள் பரவிக் கொண்டிருந்தன. மல்லிகைப்பந்தல் நகரே இந்தச் சம்பவத்தால் பரபரப்படைந்து வதந்திகள் மயமாக மாறியிருந்தது. எங்கும் இதே பேச்சாக இருந்தார்கள் மக்கள். நகரில் பீதியும் பதற்றமுமாக ஓர் இயல்பற்ற சூழ்நிலை நிலவியது.

ஏற்கெனவே திட்டமிட்டபடி மாணவர்களில் ஆறு பேரும் மாணவிகளில் ஆறு பேரும் பல்கலைக் கழக வாயிலில் கால வரையறையின்றி உண்ணாவிரதத்தைத் தொடங்கி விட்டார்கள்.

உண்ணாவிரதம் தொடங்கிய அதே சமயத்தில் மாணவர்களின் குழு ஒன்று மேரி தங்கத்தின் பெற்றோரைச் சந்திக்க இரகசியமாக நிலக்கோட்டைக்கு விரைந்தது. ஆனால் நிலக்கோட்டையில் அந்தப் பெற்றோரின் வீடு பூட்டப்பட்டுக் கிடந்தது. அவர்களைப் பற்றிக் கேட்டாலே ஊரில் யாரும் பதில் சொல்லப் பயந்தார்கள். அந்தத் தெரு நிறைய சி.ஐ.டி.க்கள் நிரப்பப்பட்டிருந்தார்கள்.

(தொடரும்)

சொல்லைச் செயலாக்குவதாகக் கூறிக் கொள்வது, தி. மு. க. ஆட்சியில் வெறும் சொல்சிலம்பமாகி விட்டது. சொல்வது சுலபம்; செயலாக்குவது சிரமம். சொல்லையும் செயலையும் ஒன்றுக்கிக் காட்டுபவர்களே சான்றோர் எனப் போற்றப்படுவர். அண்ணு வழியைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொள்ளும் கட்சிப் பிரமுகர்கள் மதுவிலக்கு விஷயத்தில் அவர் சொன்னதை விட்டு எப்படிச் செயற்படுகிருர்கள் என்பதை அண்ணுவின் சட்டசபைக் கேள்வி பதில்களிலிருந்து அறியலாம். அண்ணல் காந்தியடிகளின் பிறந்தாளையொட்டி இதை வெளியிடுகிறோம். — ஆசிரியர்



# அண்ணுவின் சொல்லும் தம்பிகளின் செயலும்!

**17-6-67 சட்டசபை உரையாடல்**

திரு க. ர. நல்லசிவம்: மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டுமென்ற கோரிக்கையும், ரத்து செய்ய வேண்டாமென்ற கோரிக்கையும் ஒரே அளவில் இன்று வாதத்தை ஏற்படுத்தும் அளவிலே பெரிய விஷயமாக இருந்து வருகிறது. இது சம்பந்தமாக இந்த வாதத்தை நீட்டிக் கொண்டு போவதை விட வோட்டெடுப்பு நடத்தி, இதை முடிவுக்குக் கொண்டுவர அரசாங்கம் தயாராக இருக்கிறதா?

மாண்புமிகு திரு சி. என். அண்ணுதுரை: இரண்டு கோரிக்கைகளும் ஒரே அளவுக்கு இருக்கின்றன என்பது அங்கத்தினர் அவர்களின் அபிப்பிராயம். என்னைப் பொறுத்த வரையில் மதுவிலக்கு நீடிக்க வேண்டுமென்ற அபிப்பிராயம்தான் கணிசமான அளவுக்கு அதிகமாக இருப்பதாகக் கருதுகிறேன். இதை ஓட்டெடுப்புக்கு விடவேண்டும் என்ற கருத்தை அங்கத்தினர் அவர்கள் கொண்டிருப்பார்களானுல் அதற்குப் பொதுமக்களின் அபிப்பிராயம், மற்ற அரசியல் கட்சிகளின் கருத்து, குறிப்பாக மதுவிலக்கை முதலில் புகுத்திய கட்சியின் அபிப்பிராயங்கள் ஆகியவற்றை அறிந்து வந்து சொல்வார்களானுல், மெத்த உபகாரமாக இருக்கும்.

திரு பி. ஜி. கருத்திருமன்: மதுவிலக்குக் கொள்கையைத் தீவிரமாக அமல்படுத்த வேண்டும் என்று முதலமைச்சர் அவர்கள் கூறுவதைப் பாராட்டுவதோடு, மதுவிலக்குத் திட்டம் பூரணமாக வெற்றி பெறுவதற்கு இந்தச் சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கும் கடுமையான நடவடிக்கைகள் என்ன என்பதை அறிய ஆவலோடு இருக்கிறேன்.

மாண்புமிகு திரு சி. என். அண்ணுதுரை: மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டுமென்று மதுவிலக்கைப் புகுத்திய கட்சியிலுள்ள ஒரு சிலர் சொல்வதற்கு நாங்கள் பலியாகாதது, முதல் கடுமையான நடவடிக்கை. இரண்டாவது கடுமையான நடவடிக்கை, இதனுல் அதிகமான பண வசதி கிடைக்கும் என்று ஆசை காட்டப்பட்டும் அதற்குப் பலியாகாதது.

திரு ஏ. கே. சுப்பையா: முதலமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் புள்ளி விவரத்திலிருந்து 9491 கேஸ்கள் இந்த ஆறு ஆண்டு காலத்தில் அதிகப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகவே, மதுவிலக்குச் சட்டம் தோற்றுப்போய் விட்டது என்பது நன்ருகத் தெரிகிறது. இதைப் பரிசீலனை செய்ய அரசாங்கம் ஒரு கமிட்டி நியமிக்குமா?

மாண்புமிகு திரு சி. என். அண்ணுதுரை: மதுவிலக்குக் குற்றங்களின் எண்ணிக்கை அதிகமாயிருப்பதால் மதுவிலக்குத் தோற்றுப் போய்விட்டது என்று கருதுவது சரியான வாதமாகாது. அதற்கு முன்னுல் எல்லாரும் குடிக்கலாம் என்றிருந்தபோது எவ்வளவுபேர் குடித்தார்கள், குடித்துக் கொண்டிருந்தார்கள் என்ற எண்ணிக்கையைப் பார்த்தால்தான் அதிலிருந்து இப்பொழுது எவ்வளவு குறைந்திருக்கிறது என்பது தெரியும்.

திரு எஸ். முருகையன்: காங்கிரஸ் ஆட்சி செய்யக் கூடிய மாநிலங்களில் எல்லாம் இந்த மதுவிலக்குச் சட்டம் எடுக்கப்பட்டிருக்கிறது. சில மாநிலங்களில் தளர்த்தப்பட்டிருக்கிறது. இதை இந்த அரசாங்கம் பரிசீலனை செய்யுமா?

திரு சி. என். அண்ணுதுரை: மற்ற அரசாங்கங்கள் செய்கிற தவருன நடவடிக்கைகளை இந்த அரசாங்கம் பின்பற்ருது.

திரு வ. ஜார்ஜ்: மதுவிலக்குக் குற்றங்களைக் கண்டுபிடிக்க ஆகக்கூடிய செலவைக் காட்டிலும், தண்டனை கொடுத்து அபராதம் மூலம் பெறுகிற வருமானம் கூடுதலாக இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

மாண்புமிகு திரு சி. என். அண்ணுதுரை: இதனைச் சர்க்கார் லாப நஷ்டப் பிரச்னையாக எடுத்துக் கொள்ளவில்லை.

டாக்டர் எச். வி. ஹண்டே: இந்த அரசாங்கம் மதுவிலக்கை ரத்து செய்வதால் எவ்வளவு பணத்தொகை ஆதாயம் என்று கணக்கிட்டுப் பார்ப்பதற்கு முன்வருமா?

மாண்புமிகு திரு சி.என். அண்ணுதுரை: மதுவிலக்குப் பிரச்னையைச் சர்க்கார் லாப நஷ்டப் பிரச்னையாகக் கருதவில்லை.

திரு க. ர. நல்லசிவம்: சில ராஜ்யங்களில் மதுவிலக்கை ரத்து செய்ததன் மூலம் ஓரளவுக்கு அதிக வருமானம் பெறுகின்றன. நமது ராஜ்யத்தில் மதுவிலக்கைக் கடுமையாக அமல் நடத்துவதன் மூலம் ஏற்படும் பண நஷ்டத்தை ஈடுசெய்வதற்கு மத்திய சர்க்காரிடம் ஏதாவது பண உதவி கோரப்பட்டதா?

மாண்புமிகு திரு சி. என். அண்ணுதுரை: பண உதவி வரவில்லை. கனம் உறுப்பினர் சொன்ன பிறகு அதை மத்திய சர்க்கார் கவனித்து, பாராட்டி, ஓரளவுக்கு நிதி உதவி அளிக்க வேண்டிய ஒரு பிரச்னையாக நாம் உணர்ந்திருப்பதைப் போலவே உணர்ந்து செயலாற்றக் கோருகிறேன்.

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1921, டிசம்பர் 28உ**

இந்த ஆசிரமத்துக்கு வந்து எட்டு நாட்கள் ஆகிவிட்டன. இந்தப் பகுதியில் எங்களை அதிக நாட்கள் வைத்திருக்க மாட்டார்கள் என்று அறிகிறேன். இந்த அறைகள் மரண தண்டனை பெற்ற கைதிகளுக்காகவும், தனிச் சிறைத் தண்டனை பெற்ற கைதிகளுக்காகவும் ஏற்பட்டவை. தனிச் சிறைத் தண்டனை தர விரும்பினால் கம்பிக் கதவு முன்னால் ஒரு மரக் கதவை இழுத்து வைத்துக் காற்று வராமலும் செய்து விடுவார்கள்.

அரசியல் கைதிகளை நடத்தும் முறையைச் சீர்திருத்த இன்னும் எவ்வளவோ முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. அவர்கள் எல்லாரையும் சாதாரணக் கைதிகளைப் போலவேதான் நடத்துகிறார்கள். உணவு விஷயத்திலும் வேலை கொடுக்கும் விஷயத்திலும் கட்டுப்பாடு விஷயத்திலும் எவ்வித வேறுபாடும் இருப்பதர்க எனக்குத் தோன்றவில்லை.

மாப்பிள்ளைமார் கலகத்தின் காரணமாகத் தண்டனை பெற்றவர்களிடம் அளவுகடந்து வேலை வாங்குகிறார்கள். அதைக் காண அதிக வேதனையாக இருக்கிறது. அவர்கள் சன்மார்க்க விரோதமான காரியம் எதுவும் செய்தவர்களல்ல. அவர்களின் தலைவர்கள் சுதந்திரம் பெறவும் மதத்தைக் காப்பாற்றவும், பாலங்களை இடிக்குமாறும் தந்திக் கம்பிகளை அறுக்குமாறும் உபதேசித்தார்கள். அதைக் கேட்டு அவர்கள் அப்படியே செய்தார்கள். அவ்வளவுதான்; அதற்காக அவர்களை இவ்வளவு கஷ்டப்படுத்த வேண்டுமா? மாப்பிள்ளைமாரும் தங்கள் பகைவர்களிடம் இந்தமாதிரியேதான் நடந்து கொள்வார்கள். அதை எண்ணித்தான் நான் என் மனத்தைச் சமாதானம் செய்து கொண்டேன்.

எப்போது, எப்போது என்று எதிர்பார்த்து நிற்கும் மனநிலை சிறையில் காணப்படுவது போல் வேறெங்கும் காணப்படுவதில்லை. பாரமான பளுவைத் தூக்கும்பொழுதாயினும் சரி, அல்லது அதனிடையில் அரை நிமிஷ ஒய்வுபெற நேரும்பொழுதாயினும் சரி, கைதிகள் இன்னும் எத்தனை நாட்கள் இந்த மாதிரி கஷ்டப்பட வேண்டும்? எப்பொழுது சுயராஜ்யம் வரும்? நமக்கு வெற்றி உண்டாகின்றதா? காந்தியடிகள் எங்கே இருக்கிறார்? என்பவை போன்ற கேள்விகளைக் கேட்கிறார்கள்.

துணி துவைக்கும் வேலை என்னுடைய தேக பலத்துக்கு மிஞ்சிய காரியம் என்றே தோன்றுகிறது. இன்று அதிகமாகக் களைத்துப் போனேன். அதனால் சரியாக உண்ண முடியவில்லை. மாலை மணி இரண்டு வரையில் படுத்திருக்க வேண்டியதாகவும் ஆகிவிட்டது. எவ்வளவு பலவீனமாய் விட்டேன்! முட்டாள்தனமாக நடப்பதைப் பார்த்தால் இளமைப் பருவத்தைக் கடக்கவில்லை என்றே கூற வேண்டும். ஆனால் உடம்போ வயோதிகத்துக்கும் வியாதிக்கும் ஆளாய் விடவே செய்கின்றது.

எங்களுக்குக் கொடுக்கும் உணவு மனத்தைப் பண்படுத்த உதவும் தன்மை வாய்ந்ததாக இருக்கின்றது. இத்தகைய கேவலமான உணவை என்றேனும் வீட்டில் உண்டோமா? எத்தனையோ வகைக் கறிகளை வைத்துக் கொண்டும் உண்டோமல்லவா? இதை ரங்கய்யாச் செட்டியிடம் கூறினேன். தினந்தோறும் காலையும் மாலையும் ஒரே சோறும்,



ஒரே குழம்புந்தான். அவை சுத்தமாகவாவது இருக்கின்றனவா? எத்தனை மண்ணும் கல்லும்! எத்தனை தூசியும் துரும்பும்! இவற்றை உண்ண நிரம்பக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. அதற்குக் காரணம் என்ன? நாம் இது வரை நம்மைச் சூழ்ந்துள்ள ஏழை மக்களைச் சிறிதும் எண்ணாமல் பலவிதமான பலகாரங்களை உண்டு பழகியதுதான். இந்த விஷயங்களை எண்ணி எண்ணி நாங்கள் உணவை மகிழ்ச்சியுடன் உண்ணப் பழகி விட்டோம். கௌஸ் சாகேபுக்கு வேறுவிதமான சாதமும் குழம்பும் தருகிறார்கள். ஜாதி வித்தியாசமானது இங்குங்கூட எங்களைத் துரத்திக் கொண்டு வந்திருக்கின்றது. சிறை அதிகாரிகள் எங்களுக்கு உணவு ரேஷனை ஜாதிவாரியாகப் பிரித்தே கொடுக்கிறார்கள்.



மாப்பிள்ளைமார் கைதிகள் சிலருக்கு விலங்கு மாட்டியிருக்கிறார்கள் போலிருக்கிறது. 'க்ளாங் க்ளாங்' என்று சத்தம் சதா கேட்கிறது. திண்டுக்கல்லிலிருந்து தம்புசாமி நாயுடு, நடேசபிள்ளை என்று இரண்டு நண்பர்கள் என்னைப் பார்க்க விரும்புவதாகச் சிறை அதிகாரிகள் வந்து கூறினார்கள். அவர்கள் அன்புக்காக வந்தனம் அளிப்பதாகவும் ஆனால் சிறைச்சாலை விதிகள் ஒரு மாதத்தில் ஒரு முறைதான் பேட்டிக்கு அனுமதி அளிக்கும் என்பதாகவும், நான் சுகமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதால் அவர்கள் வந்து பார்ப்பதால் விசேஷ நன்மை எதுவும் உண்டாகாது என்பதாகவும், அவர்களுக்கு ஒரு சிறு சீட்டு அனுப்பினேன். யாரேனும் வந்து பார்த்துப் பேச வேண்டுமானால் கம்பி வலை வழியாகவே பேச வேண்டும் என்று தெரிகிறது. இந்த நிபந்தனையுடன்கூடிய உரிமையை எந்த நாளேனும் பயன்படுத்துவேனோ என்னவோ, எனக்கு அதுபற்றி விளங்கவில்லை.

அடிமைகளை வைத்து வேலை வாங்கும் முறை இன்னும் ஒழிந்து விடவில்லை. அந்த முறையை எவ்வளவு கேவலமாகக் கையாளலாமோ, அவ்வளவு கேவலமாகச் சிறையில் கையாளுகிறார்கள். ஆயிரக்கணக்கான மக்களை வைத்து வேலை வாங்குகிறார்கள். வேலை செய்ய மறுத்தால் அடியும் உதையும் அதைவிட பயங்கரமான தண்டனையும் தருகிறார்கள். அங்கு நடப்பது யாருக்கும் தெரியாது. தெரிந்தாலும் அதைப் பற்றி எதுவும் கூறலாகாது. இப்படி வேலை வாங்குகிறார்களே, ஏதேனும் கூலி உண்டா? அதுவும் கிடையாது.

மாடுகளைக் கொண்டு எண்ணெய் ஆட்டலாம். கவலை இறைக்கலாம். ஆனால் அடிமைகள் அதிகமாக இருக்கும்பொழுது மாடுகள் எதற்கு? இந்தக் கொடுமைகளை இழைத்தாலும், அவர்களைத் திருத்தும் நோக்கம் இருக்குமானால் பாதகமில்லை. ஆனால் அந்த நோக்கம் சிறிதும் கிடையாது என்பது மட்டுமன்று, கைதிகளை எந்த விதத்திலும் திருத்த முடியாது என்பதே சகல சிறை அதிகாரிகளும் மேற்கொண்டுள்ள கொள்கையாகும். கைதிகளுடைய ஆன்மாவை விழிக்கச் செய்யவோ அல்லது அவர்களுடைய உயர்ந்த உணர்ச்சிகளைப் பயன்படுத்தவோ எவ்வித முயற்சியும் செய்யப்படுவதில்லை. கைதிகளுக்கு ஆன்மாவோ உயர்ந்த உணர்ச்சிகளோ உண்டு என்று யாரும் நம்புவதாகத் தெரியவில்லை. எவ்வளவு குறைவாக உணவு கொடுக்கலாமோ அவ்வளவு குறைவாகக் கொடுத்து, எவ்வளவு அதிகமாக வேலை வாங்கலாமோ அவ்வளவு அதிகமாக வாங்கும் சிறைச்சாலையை அதனால் தான் அடிமைகளை வைத்து வேலை வாங்கும் ஒரு யந்திரசாலையென்று கூறுகிறேன். அடிமைகளைச் சொந்தமாக வாங்காமல் குறிப்பிட்ட காலத்துக்கு வாடகைக்கே பிடிக்கிறார்கள். அதனால் தான் அவர்களுடைய ஆரோக்கியத்தைப் பற்றியும் ஒழுக்கத்தைப் பற்றியும் சிந்திப்பதில்லை. முதலாளியினுடைய க்ஷேமத்துக்கு வேண்டிய அளவு ஆரோக்கியமும் ஒழுக்கமும் இருந்தால் போதும் என்றே எண்ணுகிறார்கள். தவறுகள் செய்தால் தண்டிக்கிறார்களேயன்றித் திருத்துவதில்லை. திருத்தும் வேலை கஷ்டமானது. சீக்கிரமாகவும் பயன் தராது. ஆகவே கைதிகள் அடிமைகளாகவும், அதிகாரிகள் அடிமைகளை வேலை வாங்குகிறவர்களாகவும் இருக்கிறார்கள். இத்தகைய நிலைமையில் எப்படி அவர்கள் சீர்திருத்தம் அடைய முடியும்?







☐ புகைப்படத்தில்
☐ காந்தீயம்




முதல் பரிசு : ரூ. 50/-

எஸ். ராமன்
7/45, ஹவுஸிங் காலனி
வல்லம் ரோட்
தஞ்சாவூர்

பரிவுப் பரிசு : ரூ. 10/-

டாக்டர் எஸ். பரமசிவம்
எம். பி. பி. எஸ்.
22, இரண்டாவது மெயின் ரோடு
ஸி. ஐ. டி. நகர்
சென்னை – 35



# செயற்கை இழைத் துணிகளை பத்திரமாக சலவை செய்திட

# ஜெண்டீல்




செயற்கை இழைத் துணிகள்— 'டெரீன்', நைலான், ரேயான் முதலிய மென்மையான துணிகளை விசேஷ முறையில் சலவை செய்ய வேண்டியது அவசியம். அந்த முறை தான் ஜெண்டீல். அது உங்கள் மென்மையான ஆடைகளின்— புடவை, கால்சட்டை, சட்டை, ஸ்கார்ஃப் முதலிய ஆடைகளின் நெசவின் நயத்தையும், பளபளப்பையும் பாதுகாக்கிறது.

ஜெண்டீல், உங்கள் மென்மையான துணிகளை—அதாவது செயற்கை இழைத் துணிகள், பட்டாடை, கம்பளி ஆடைகள் முதலியவற்றை— பத்திரமாக சலவை செய்யவே விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

**ஜெண்டீல் 500 கிராம் மற்றும் 250 கிராம் புட்டிகளில் கிடைக்கிறது.**

**ஜெண்டீல்—மென்மையான துணிகளை மனையிலேயே பத்திரமாக சலவை செய்யும் சாதனம்**

Shilpi HPMA-9A/72 Tam

# இளைஞர் சமுதாயம்

## 24. குறள் வழி இயங்கும் குழு





**ம**துரை மாவட்டத்தைச் சேர்ந்த சின்னமனூரில் சில இளைஞர்கள் ஒன்று சேர்ந்து 'இளைஞர் சன்மார்க்க சங்கம்' என்ற பெயரில் ஓர் இளைஞர் மன்றம் நடத்துகின்றனர்.

நான்கு ஆண்டுகளாக நடக்கும் இந்தச் சங்கத்தின் முக்கிய நோக்கம் குறள்வழி வாழ்க்கையைப் பிரபலப்படுத்துதல்.

''குறட்பாக்களை மனப்பாடம் பண்ணுவதனாலோ, கண்ட இடங்களில் அவற்றை எழுதி வைப்பதனாலோ பயன் ஏதும் இல்லை. மக்களுக்குக் குறள் வழி வாழப் பயிற்சி தர வேண்டும்'' என்றார் செயலாளர் வேலுச்சாமி.

''உதாரணமாக....?''

''எடுத்ததற்கெல்லாம் ஆஸ்பத்திரிக்குச் சென்று ஊசி போட்டுக் கொள்வதை முதலில் நிறுத்த வேண்டும்.

**'மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு**
**அருந்தியது அற்றது போற்றி உணின்'**

என்ற வள்ளுவர் வாக்கைக் கடைப்பிடித்தால் போதும். முன் உண்ட உணவு ஜீரணமாகி விட்டதா என்று கவனித்துப் பார்த்து மறு உணவை உட்கொள்ளும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால், மருந்து சாப்பிட வேண்டிய அவசியமே ஏற்படாது என்கிறார் வள்ளுவர்.

**'இழிவறிந்து உண்பான்கண்**
**இன்பம்போல் நிற்கும்**
**கழிபே ரிரையான்கண் நோய்'**

''மனிதனின் தேவைக்கான குறைந்த அளவு இன்னதென்று அறிந்து உண்பவனிடத்தில் மகிழ்ச்சி நிலைத்து நிற்பதுபோல், மிகவும் அதிகமாக உண்பவனிடத்தில் நோய் நிலைத்து நிற்கும் என்று திருக்குறள் கூறுகிறது. நோயற்ற வாழ்வுக்கு மட்டும் தானா வள்ளுவர் வழிகாட்டியிருக்கிறார்? இல்லை. மனித இனம் உயிர் வாழ்வதற்கு வேண்டிய எல்லாவற்றையும் திருக்குறள் கூறுகிறது. ஆகவே, திருக்குறளை ஒருவன் ஆழ்ந்து படித்து அதன் வழி நடக்க முற்படுவானானால், அவன் நிறை வாழ்வு வாழ முடியும்...'' என்று கூறிச் சற்று நிறுத்தினார்.

நான் இதுதான் சமயம் என்று, ''நீங்கள் சொல்வது முற்றிலும் சரி. இந்த விஷயத்தில், உங்கள் சங்கத்தில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''என்ன செய்கிறோம் என்று சொல்லட்டுமா? அல்லும் பகலும் அனவரதமும் திருக்குறள் படிக்கிறோம். மக்களுக்கு எங்கள் சங்கத்தின் மூலம் அவ்வரிய கருத்துக்களை அவ்வப்போது எடுத்துச் சொல்லுகிறோம். மாதம் இருமுறை ஒரு கூட்டம் கூட்டி, அக்கூட்டத்தில் செய்த பணிகளைப் பற்றியும், செய்யப் போகும் பணிகளைப் பற்றியும் விவாதித்து வருகிறோம். அதன் மூலம் அங்கத்தினர்களின் பேச்சாற்றல், எழுத்தாற்றல் ஆகியவற்றை வளர்த்து வருகிறோம். 'இணர் ஊழ்த்தும் நாறா மலரனையர், கற்றது உணர விரித்து உரையாதார்' என்று திருக்குறள் கூறுகிறதே!''

''குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஏதாவது ஒரு பணியை உங்கள் சங்கம் செய்திருக்கிறதா?''

''ஆகா! எங்கள் சங்கத்தின் முக்கிய பணியும், முதற் பணியும், நற்பணியுமாகிய ஒரு சிறந்த பணி ஆற்றியிருக்கிறோம். தேசியப் பாதுகாப்பு நிதி திரட்டி மத்திய அரசிடம் வழங்கியதைத்தான் குறிப்பிடுகிறேன்.''

''....இன்னும் உங்கள் சங்கத்தின் தொண்டு ஏதாவது ஒன்று கூற முடியுமா?''

''கிராம மக்களின் அறியாமையை அகற்ற முதியோர் கல்வி வகுப்புக்கள் நடத்திவருகிறோம். 'பாதானும் நாடாமால் ஊராமல் என்னொருவன் சாந்துணையும் கல்லாதவாறு' என்பது வள்ளுவர் வாக்கு அல்லவா ? சிக்கன வாழ்க்கையை வலியுறுத்துகிறோம். 'அளவறிந்து வாழாதான் வாழ்க்கை, உளபோல இல்லாகித் தோன்றாக்கெடும்......' என்ற குறட்பாவை மேற்கோளாகக் கொண்டு பிரசாரம் செய்கிறோம்.''

''கிராம மக்களிடம் நீங்கள் முக்கியமாகக் காணும் குறை யாது ?''

''அச்சம். அதாவது எதிலும் துணிந்து இறங்கிச் செயல்படத் தயங்குகிறார்கள். பயப்பட வேண்டியவைகளுக்குப் பயப்பட வேண்டியதுதான். ஆனால் எதற்கும் பயப்பட்டால் எப்படி? 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை, அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்' என்று வள்ளுவர் தெளிவாகக் கூறியிருக்கிறாரே!''

சின்னமனூரர் இளைஞர் சங்கத்தின் மீது எனக்குத் தனி மதிப்பு ஏற்பட்டுவிட்டது. குறள் வழி வாழ முற்பட்டிருக்கும் இந்தச் சங்கம் பலவிதத்திலும் வெற்றி கண்டு பொதுத் தொண்டுகளில் மேலும் மேலும் உற்சாகத்தோடு ஈடுபடும் என்பது செயலாளரின் பேச்சிலிருந்து உறுதியாயிற்று.

இந்தச் சன்மார்க்க சங்கம் இறைவழிபாட்டில் சிரத்தை காட்டுகிறது. திருப்பாவை, திருவெம்பாவை பாட்டுப் போட்டி மாணவிகளுக்காக நடத்திப் பரிசளித்திருக்கிறது.

''மக்கள் அமைதியாகவும் ஆனந்தமாகவும் வாழ வேண்டுமானால் அதற்கு இறை வழிபாடு அவசியம். அதற்காகத்தான்....'' என்று செயலாளர் கூறிக் கொண்டிருக்கும் போதே இடைமறித்து, நான், ''ஆம்,' தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால், மனக் கவலை மாற்றல் அரிது' '' என்று என் திருக்குறள் ஞானத்தை வெளிப்படுத்திக் கொண்டேன்!

— ஸோமாஸ்



# இருகிழவர்கள் என்ன பேசினார்கள்!

1931-ல் லண்டனில் ஒரு தாடியுள்ள கிழவரும் ஒரு பொக்கைவாய்க் கிழவரும் சந்தித்துப் பேசினார்கள். மிகவும் வயதான கிழவர் யாரையும் தூக்கி எறிந்து பேசிக் கிண்டல் செய்பவர். மற்றொரு கிழவர் தன்னடக்கமே உருவானவர். ஒரு கிழவர் மற்றொரு கிழவரை விடப் பதினொரு வயது மூத்தவர். இவர்கள் அரை மணி நேரம்தான் பேசினார்கள்.

தாடிக் கிழவர்தான் உலக இலக்கிய மேதையான ஜார்ஜ் பெர்னார்ட் ஷா. பொக்கை வாய்க் கிழவர் மகாத்மா காந்தி. இந்த அரை மணி நேரத்துக்குள் இவர்கள் மனம் விட்டுப் பல விஷயங்களைப் பற்றிப் பேசினர்.

பேச்சு முடிந்தபின் காந்திஜி ஷாவிடம், ''வீட்டுக்கு எப்படிப் போகப் போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''ஏன்! டாக்ஸியில்தான்.''

''வேண்டாம். நான் காரில் கொண்டு விடச் சொல்லுகிறேன்'' என்று காந்திஜி கூறிவிட்டு ஓர் இளைஞரை அழைத்து ஷாவைக் காரில் கொண்டு விட்டு வரச் சொன்னார்.

வீடு போய்ச் சேர்ந்ததும் ஷா அந்த இளைஞர் டிரைவருக்கு ஐந்து ஷில்லிங் இனாம் கொடுத்தார். அவர் வாங்க மறுத்துவிட்டார். பின்னர்தான் அவர் இந்திய சமஸ்தானம் ஒன்றின் அரசர் என்று தெரிய வந்தது. இந்த சமஸ்தானாதிபதி யாரென்று தெரியவில்லை.

இவ்விவரங்களை பெர்னார்ட் ஷாவே 1946-ல் லண்டனில் காந்திஜியின் புதல்வர் தேவதாஸிடம் தெரிவித்திருக்கிறார்.

ஷா மேலும் தெரிவித்ததாவது : ''காந்திஜி வந்ததும் ஒரு பெரிய சோபாவில் உட்காரச் சொன்னேன். அதில் அவர் தர்ம சங்கடத்துடன் உட்கார்ந்தார் என்பது தெரிந்தது. கீழே தரையில் வேண்டுமானால் உட்காருங்களேன் என்று கூறி நானும் தரையில் உட்கார்ந்தேன். அவர் எவ்வளவு மகிழ்ச்சியுடன் கீழே உட்கார்ந்தார் என்பதை நேரில் கண்டவர்தான் உணர முடியும். 'நீங்கள் மகாத்மா, நான் மைனர் மகாத்மா' என்று நான் கூறியதும் பொக்கை வாய் சிரிப்பு சிரித்ததை என்னால் வெகு காலம் மறக்கவே முடியவில்லை.''

ஷா கேட்டார்: ''இந்த வட்டமேஜை மகாநாட்டின் நடவடிக்கைகள் உங்கள் பொறுமையைச் சோதிக்கவில்லையா ?''

காந்திஜி பதிலளித்தார்: ''பேசித் தீர்த்தே காலத்தை ஓட்டப் பார்க்கின்றனர். இந்தியாவுக்கு இதுதான் தர முடியும் என்பதை வெட்டு ஒன்று, துண்டு இரண்டாகச் சொல்லி விடக்கூடாதோ ?''

ஷா : ''இந்த பிரிட்டிஷ்காரர்களின் போக்கே இப்படித்தான்!'' (பெர்னார்ட் ஷா ஓர் ஐரிஷ்காரர்.)

காந்திஜியைச் சந்தித்தபின் நிருபர்கள் ஷாவைச் சூழ்ந்து கொண்டு, ''காந்தி பற்றி உங்கள் மனத்தில் பட்டது என்ன?'' என்று கேட்டார்கள். ''ஹிமாலயத்தைப் பார்த்ததும் உங்கள் மனத்தில் என்ன படும்? அதுதான்'' என்று பதிலளித்தார்.

மகாத்மா மறைந்தபோது பெர்னார்டு ஷா கூறியது என்ன தெரியுமா? ''இந்த உலகில் நல்லவனாக இருப்பது ஆபத்து.''

— சுஜன்

# ஸைக்கோ ஸாரநாதன்

## கி.ராஜேந்திரன்



### 39. வேஷம் கலைந்தது!

**ம**னத்தால் மட்டுமின்றித் தோற்றத்தாலும் ஸைக்கோ ஸாரநாதனாக மாறிய அமிர்தலிங்கம், தன் அறையை விட்டு வெளியே வந்து கதவைச் சாத்தினான். அவனது கரத்தில் நெளிந்த கயிற்றுக்குச் சுற்றி வளைக்க ஒரு கழுத்து தேவைப்பட்டது. அது குறிப்பிட்ட ஒரு நபரின் கழுத்தாகத்தான் இருக்க வேண்டும் என்கிற அவசியமில்லை. ஓர் ஆண் மகனின் கழுத்து அகப்பட வேண்டும். அவ்வளவு தான். அந்த ஆண்மகன் மூச்சு முட்டித் திணறி இறப்பதைத் தன் புலன்களால் ஸாரநாதன் உணர்ந்து களிக்க வேண்டும். மனத்தில் சுமையாகத் தேங்கிய வெறிக் குவியல் பீறிட்டுக்கொண்டு வெளிவந்துவிட, அவன் இலேசாகி, மேகப் பொதியாக ஆகாயத்தில் மிதப்பது போன்ற உணர்வைப் பெற வேண்டும். அவன் அந்த ஓட்டலில் இருந்த எந்த அறைக்கு வேண்டுமானாலும் சென்று, கதவைத் தட்டி, திறக்க வருபவனின் கழுத்தைக் கயிற்றால் சுற்றி வளைக்கத் தயார். வெளியே வராமல் உள்ளிருந்தபடியே "யார் அது?" என்று வினவினால் "தந்தி வந்திருக்கு ஸார்!" என்பது போன்ற ஏதேனும் ஒரு பொய்யைச் சமயோசிதமாகச் சொல்லவும் அவனுக்குத் தெரியும். கொலை நடந்து முடிந்த பிறகுதான் அவன் பிடிபடாமல் தப்பிச் செல்வதற்கான உபாயங்கள் பற்றி யோசிக்க முடியும்: தன் அறைக்கே யாரும் அறியாமல் திரும்ப வந்து ஹிப்பியாக உருமாறி மறுநாள் அதிகாலையில் ஒன்றும் தெரியாதவனைப் போல் அறையைக் காலி செய்து கொண்டு போய்விடலாம். அதற்கு முன்னால் போலீஸார் விஷயமறிந்து வந்து விட்டார்களென்றாலும் ஓட்டலில் தங்கியிருக்கும் அனைவரது அறைகளையும் சோதனையிட வேண்டும் எனத் தீர்மானித்துச் செயல்படுபவர்கள் என்றாலும், 'தான் அமிர்தலிங்கம் அல்ல, ஸாரநாதன்தான்' என்று காட்டிக் கொடுக்கக் கூடிய சிறு சாட்சியம் இருப்பினும் அதை அவர்கள் வருமுன்னால் அழித்து விடக்கூடிய சாமர்த்தியம் அவனுக்கு உண்டு. கொலை புரிந்துவிட்டுத் தன் அறைக்குத் திரும்புமுன்னமே யாராவது அவனைக் காண நேர்ந்துவிட்டாலோ இப்போதுள்ள இந்தக் கோலத்திலேயே அவன் இருளோடு கலந்து ஓடி மறைவான்; வேறு ஊரை அடைந்து வேஷத்தை மாற்றிக் கொள்வான்; அல்லது கொடைக்கானலைச் சுற்றியுள்ள காடுகளில் விலங்கு போலச் சில காலம் வாழ்க்கை நடத்தவும் அவன் தயாராகி விடுவான். என்ன செய்வானோ, அது அவன் கொலை வெறி அடங்கிய பின்னர் தான் அவனுக்கே தெரிய வரும். இப்போதைக்கு அவன் சிந்தனை, செயல் இரண்டும், கொலை செய்ய



வேண்டும் என்ற ஒரே நோக்கில் ஒன்றி ஒருமுகப் பட்டிருந்தன.

ஆனாலும் ஹோட்டல் அறைகளுள் ஏதேனும் ஒன்றின் வாசலில் நின்று கதவைத் தட்டாமல், பத்மநாபன் அறையை நாடி அவன் கால்கள் இயல்பாக அவனை இட்டுச் சென்றதற்கு வலுவான காரணம் ஒன்று இருந்தது. சில தினங்களுக்கு முன்னால் பத்மநாபன் ஹோட்டல் அதிபர் தனராஜிடம், ''எங்கள் அறை வராந்தாக் கதவில் கண்ணாடி உடைந்திருக்கிறது; திருடன் வந்தால் அதன் வழியே கையை விட்டு உட்புறம் இருக்கும் தாழ்ப்பாளை சுலபமாகத் திறந்து விடுவான்'' என்று சொல்லிக் கொண்டிருந்தது அவன் மனத்தில் பசுமையாக இன்னும் இருந்ததால் அவன் நிதானமாக ஆனால் நிச்சயபுத்தியுடன் அவர் அறையை நோக்கிச் சென்றான். மற்ற அறைகள் என்றால் உட்புறக் கதவு, வராந்தாக் கதவு என்று இரு கதவுகளைத் திறந்து கொண்டு உள்ளே இருப்பவர் இவனிடம் சிக்க வெளியே வர வேண்டும். பத்மநாபன் அறையில் ஒரு கதவை இவனே திறந்து விடலாம். உட்புறக் கதவைத் தட்டும்போது உள்ளே இருப்பவரை எழுப்ப அதிகமாகச் சத்தத்தைக் கிளப்ப வேண்டியிராது. அக்கம் பக்கத்து அறைகளில் உள்ளோர் விழித்துக் கொள்ள மாட்டார்கள். இந்த எண்ணம் அவனையும் அறியாமல் மாரநாதனின் உள்ளத்தில் வேலை செய்து தான் அவனை அங்கு போக வைத்தது.

கையோடு எடுத்து வந்திருந்த டார்ச்



விளக்கின் ஒளியில் உடைந்த கண்ணாடியைப் பார்த்தான் ஸாரநாதன். பாம்பு நெளிவது போல் கையை உள்ளே லாகவமாகச் செலுத்தித் தாழ்ப்பாளைத் தடவித் தேடிக் கண்டுபிடித்தான். ஒரு 'கிங்' ஒலிகூட எழுப்பாமல் கதவு திறந்து கொள்ள வராந்தாவில் அடியெடுத்து வைத்தான். அப்போது அவனுக்குப் பேரானந்தத்தையும் ஓரளவு வியப்பையும் அளித்த காட்சியைக் கண்டான். வராந்தாவை அடுத்து இருந்த அறைக் கதவு 'வருக, வருக' என்று இவனைக் கைநீட்டி வரவேற்பது போல் திறந்தே கிடந்தது!

டார்ச் லைட் ஒளி அறையின் நாலா புறமும் சுற்றிச் சுழன்று பத்மநாபன் படுத்திருக்கும் கட்டிலை அவனுக்குக் காட்டிக்கொடுத்தது. அசுரப் பசி கொண்டவன் போல் அவன் தன் வெறியைத் தணித்துக் கொள்ள விரைந்தான்.

''யாரு? என்ன?'' என்ற இரண்டு கேள்விகளைப் பீதியும் குழப்பமும் நிரம்பிய குரலில் நாக்குளறக் கேட்டார் பத்மநாபன். அதற்கு மேல் அவரால் குரலெழுப்ப முடியாதபடி மின்னலெனச் செயல்பட்டு விட்டன, ஸாரநாதனின் கரங்கள்.

* * *

ஸாரநாதனைப் பிடிக்க அப்பாவும், பின்னையும் ஏதோ திட்டம் போட்டிருக்கிறார்கள் என்பதை அறிந்ததிலிருந்து, அவர்களுக்கு ஏதேனும் ஆபத்து நேருமோ என்று பயந்து கொண்டிருந்த மீனுவுக்கு இலேசில் தூக்கம் வரவில்லை. ''வாசல் கதவைச் சாத்திவிட்டுப் படு'' என்று அம்புஜம் சொன்னதையும் அலட்சியப்படுத்திவிட்டுக் கட்டிலில் புரண்டு கொண்டிருந்தாள்; தூங்கும்போது சாத்திக்கொண்டால் போயிற்று என்ற நினைப்பில். நீண்ட நேரம் கழித்து இயற்கை வயப்பட்ட கண் இமைகளில் நித்திரை பாரமாக இறங்க அவை தாழ்ந்தன. ஆனால் மீனு தூங்கிவிட்டாள் என்றும் சொல்ல முடியாது. இமைகள் மூடியிருந்தபோதிலும் தனக்குக் கண் கூசுவதை உணர்ந்தாள். ஸாரநாதனின் டார்ச் விளக்கு ஒளி சற்று நேரம் தன் முகத்தைத் தாக்கியதுதான் காரணம் என்பதை அறியாதவளாக, மின்சாரத் தடையால் அணைந்த விளக்குகள் மீண்டும் எரிய ஆரம்பித்து விட்டன என எண்ணினாள். 'சரி, எழுந்து விளக்கை அணைத்து விட்டு, வாசல் கதவையும் சாத்தி விட்டு வந்து படுக்கலாம்' என்று தீர்மானித்தாள்.

அதே சமயம், ''யார்? என்ன?'' என்று வாய் குளறத் தன் தகப்பனார் கேட்பது அவள் செவிக்கு எட்டியது. 'சொப்பனம் கண்டு பிதற்றுகிறாரோ?' என்று யோசித்தவளாகக் கட்டிலில் உட்கார்ந்த நிலைக்கு வந்து கண் விழித்துத் திரும்பிப் பார்த்தாள்.

மின் விளக்குகள் இன்னும் எரிய ஆரம்பிக்கவில்லைதான். ஆனால் மங்கிய டார்ச் லைட் ஒளியே போதுமானதாக இருந்





### பாரதி விழா

பாரதி சங்கத்தின் ஆதரவில் செப்டம்பர் 10, 11 தேதிகளில் பாரதி விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. முதல் நாள் அமரர் கு. அழகிரிசாமி குடும்ப கஷ்ட நிவாரண நிதி, திருமதி அழகிரிசாமியிடம் சேர்ப்பிக்கப்பட்டது. ரூ. 12,000 சேர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. நாமக்கல் கவிஞர் படத்தைத் திறந்து வைத்து எஸ். கிருஷ்ணசாமி பாரதி பேசினார். அரவிந்தரின் சித்தாந்தங்கள் பற்றி ஸ்ரீ கிரிதாரி பிரசாத் சொற்பொழிவாற்றினார். இரண்டாம் நாள் கைவலத்தில் பாரதி நூல்கள் பிற மொழிகளில் பிரசுரமாகப் பாரதி சங்கம் துணை புரியும் எனப் புதிய திட்டத்தைத் தலைவர் திரு என். மகாலிங்கம் தெரிவித்தார். தமிழில் ஆரம்பித்து ஆங்கிலத்தில் பேசி அவையோரை மகிழ்ச்சியில் ஆழ்த்தினார் ஆளுனர் கே. கே. ஷா. பாரதி பற்றிய சிறந்த நூல்களை எழுதியோர் கேடயங்கள் அளித்துச் சிறப்பிக்கப்பட்டனர்.

---

தது. அவளைச் சொல்லி முடியாத பீதியில் ஆழ்த்த. 'உடம்பிலுள்ள ரத்தமெல்லாம் உறைந்துவிட நான் ஒரு ஜடப் பொருளாகி விட்டேனா? கைகாலை அசைக்க முடியாவிட்டால் போகட்டும்; கண்டத்திலிருந்து குரல் கூடவல்லவா எழும்ப் மாட்டேனென்கிறது? ஸாரநாதனைப் பிடிக்க அவர்கள் எங்கோ ஏதோ திட்டம் போட்டுக் கொண்டிருக்கையில் அவன் இங்கேயல்லவா வந்து நிற்கிறான்! ஐயோ! பயத்தில் என் வாய் இப்படி அடைத்துப் போய்விட்டால் அப்பா என் கண் எதிரே கொலை செய்யப்படுவதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருந்த பெரும் பாவம் அல்லவா என்னைச் சூழும்! மற்றவர்கள் நினைப்பது கிடக்கட்டும், அப்புறம் என்னை நானே எப்படி மன்னித்துக் கொள்வது? நான் கூச்சலிட்டே ஆக வேண்டும். ஆண்டவனே! எனக்கு அந்தச் சக்தியைக் கொடு!'

பெரு முயற்சி செய்து மீனா 'வீல்' என்று கூக்குரலிட்டாள். ஒருமுறை ஓசை வெளிப்பட்ட பிறகு அடுத்தடுத்து வீறிட்டு அலறுவது கடினமாக இல்லை.

* * *

ஈனமான குரலில் பீதியுடன் எழுந்த அந்தக் கூக்குரல் ஓட்டலில் தங்கியிருந்த எத்தனையோ பேருடைய காதில் விழுந்தது. அவர்களில் பலர் குரல் வந்த திக்கு நோக்கி ஓடியும் நடந்தும் வரத்தான் செய்தார்கள். ஆனால் சகலருக்கும் முன்னால் வந்தவன் ரங்கநாதன். அடுத்த ஓரிரு விநாடிகளுள் உள்ளே பாய்ந்தவர் நடராஜன்.

''மீனா! மீனா!'' என்று ஆசுவாசப் படுத்தும் குரலில் உரக்க அவள் பெயரைச் சொல்லி அழைத்ததுடன், அவளைக் கட்டி அணைத்து முதுகில் தட்டிக் கொடுத்தும், தலையை வருடிக் கொடுத்தும் ஆறுதல் அளித்தான் ரங்கன்.

அம்புஜம் கட்டிலை விட்டு எழுந்திருக்காமலே, ''ஐயோ! ஐயோ!'' என்று பயத்தில் கண்களை இறுக மூடிக்கொண்டு கத்தி ரகளை செய்தாள். அனசூயா எழுந்து உட்கார்ந்து காரணம் தெரியாமலேயே 'ஓ'வென்று அழுதாள். விசுவின் தூக்கம் மட்டும் கலையவே யில்லை.

இடக் கரத்தில் பெரிய டார்ச் லைட்டும் வலக் கரத்தில் சிறிய துப்பாக்கியுமாக உள்ளே வந்திருந்த நடராஜன், ''ஸாரநாதா! உன் வேஷம் அம்பலமாகி விட்டது. பத்மநாபனை விட்டுவிடு!'' என்றார் அதிகாரத் தொனியில்.

ஆனால் ஸாரநாதனின் காதில் அவர் கோரிக்கை ஏறியதாகவே தெரியவில்லை. டார்ச் விளக்கொளி பத்மநாபன் முகத்தில் விழுகிற மாதிரி அருகிலிருந்த ஒரு ஸ்டூலின் மீது வைத்துவிட்டு அவன் தன் படுபாதகச் செயலில் இறங்கியிருந்தான். பத்மநாபனின் முகம் போகிற போக்கை, உடல் துடிக்கிற துடிப்பை, விழிகள் பிதுங்குகிற அவலத்தை, மூச்சு முட்டித் திணறுகிற கோரத்தை, உயிர் சிறிது சிறிதாக விடைபெறுகிற காட்சியை யெல்லாம் அவன் அணு அணுவாக ரசித்துக் கொண்டிருந்தான். அவன் வெறி இந்த உச்ச கட்டத்தினை அடைந்த பிறகு சுற்றுச் சூழலை உணர்கிற சக்தியே அவனுக்கு இராது என நடராஜன் உணர்ந்திருந்தார். இனி அவனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாது. காரியம் முழுமையாக முடிந்த பிறகுதான் அவன் புலன்கள் வேறு எதையும் கிரகிக்கும் திறனைத் திரும்பப் பெறும்.

ஆயினும் இன்னும் ஒரே ஒரு சந்தர்ப்பம் அவனுக்குக் கொடுத்துப் பார்க்கத்


ஃப்ரெஸ்காவை நேசியுங்கள்
Beauty Talc
புத்துணர்ச்சியூட்டும்
சுகந்தம் கொண்ட
ஃப்ரெஸ்கா பியூடி
டால்க் வெண்பனியைப்
போன்ற அழகுமெருகை
உங்களுக்குத் தருகிறது.
விசே மாட்-ஃபினிஷ்
கொண்ட ஃப்ரெஸ்கா
உங்கள் வதனப்
பொலிவைச் சோபிக்கச்
செய்கிறது.
மென்மையான,
நறுமணம் கமழும்
ஃப்ரெஸ்கா உங்களை
துடிப்புமிக்க புத்துணர்ச்
சியுடன் திகழச்
செய்கிறது. எனவே,
ஃப்ரெஸ்காவை
நேசியுங்கள்
இரண்டு அளவு-
களில்
கிடைக்கிறது.
அளிக்கும்
ஃப்ரெஸ்கா
பியூடி டால்க்
ஃப்ரெஸ்கா என்றாலே புத்துணர்ச்சிதான்!
Interpub/GSF/8/72 TM

நிர்மானித்தார் நடராஜன். ''ஸார நாதா! சுட்டுவிடுவேன் உன்னை! பத்மநாபனை விட்டுவிடு!''

அவன் காதுகள் பத்மநாபனின் மூச்சு படிப்படியாக அடங்குவதைத் தவிர வேறு எதைக் கேட்டன? கண்கள் பத்மநாபனின் முகத்தில் கொஞ்சம் கொஞ்சமாக நீலம் படர்வதைத் தவிர வேறு எதைப் பார்த்தன?

இனி வினாடி தாமதித்தாலும் பத்மநாபன் பிழைப்பது அரிது என உணர்ந்த நடராஜன், துப்பாக்கி பிடித்த வலக் கரத்தின் ஆள்காட்டி விரலை அழுத்தினார். மீண்டும் மீண்டும் அழுத்தி மூன்று தோட்டாக்களை ஸாரநாதனின் உடலில் பாய்ச்சினார்.

வெடிச் சத்தம் கேட்டு விழித்துக் கொண்டு மலங்க மலங்க எல்லாரையும் பார்த்தான் விக.

ஸாரநாதன் பிணமாகி விழுந்தான்.



## 40. போய் வருகிறோம்!

''போய் வருகிறோம் மிஸ்டர் தனராஜ்! கொடைக்கானலையும் உங்கள் ஓட்டலையும் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாது எங்களால்'' என்றார் பத்மநாபன்.

''அடுத்த ஸீஸனுக்கு வாங்க. இந்தத் தடவை ஏற்பட்ட கசப்பான அனுபவங்களை அடுத்த 'ட்ரிப்'பில் மறந்துடலாம்.''

''அவசியம் வர வேண்டியதுதான்'' என்றார் பத்மநாபன்.

''பணம்?'' என்று கேட்டாள் அம்புஜம். ''கொட்டிக் கிடக்கிறதா? ஏதோ அந்த மகானுபாவன் உங்க புத்தகத்தை மொழிபெயர்க்கும் உரிமையை வாங்கிண்டு மூவாயிரம் ரூபாய் தந்தான். இந்தப் பயணத்துக்கு உதவியது.''

''தேசிய புத்தக நிறுவனத்தைச் சொல்றையா? அடுத்த வருஷம் எனக்கு சாகித்ய அகாதமி பரிசே வரும்; கவலைப்படாதே!'' என்றார் பத்மநாபன். பின்னர் ஏதோ நினைத்துக் கொண்டவர் போல், ''நடுவில் யாராவது புகுந்து தர்ஜுமா பண்ணினாலொழிய நிச்சயம் கிடைக்கும்!'' என்றார்.

''ஆக மொத்தம் பரிசு கிடைக்கப் போறதில்லே! அதுக்கு இப்பவே சப்பைக்கட்டும் போட்டாச்சு!''

தனராஜுடன் மீனா, பத்மநாபன், அம்புஜம் எல்லாருமே சேர்ந்து சிரித்தார்கள்.

''என்ன பலமான சிரிப்பு?'' என்று கேட்டுக் கொண்டே வந்தார் நடராஜன் கம்பீரத் தோற்றத்துடன். அந்தச் சிம்ம நடைக்குக் கொஞ்சமும் குறையாத விதத்தில் பின்னாலேயே ரங்கன் வந்தான் ராஜா போலே. அவன் கண்கள் இப்போது அலாதியான ஒரு தைரியத்துடன் மீனாவைக் கவ்வி ருசிக்க ஆரம்பித்திருந்தன. ஓர் ஆபத்துக்குத் தான் என்றாலும் அவளைக் கட்டி அணைத்து விட்டதானது இந்தத் தெம்பை அவனுக்கு அளித்திருக்கலாம். அந்த அனுபவத்தில் உடல் முழுதும் அவனுக்குப் பரவி யிருந்த கதகதப்பு இன்னமும் அடங்கின பாடில்லை!

''ராத்திரி நல்லாத் தூங்கினீங்களா? தனராஜ் உங்களுக்கு வேறு நல்ல அறை கொடுத்தாரே?''

''தூக்கம்னா என்னன்னு ஞாபகம் வரவே இன்னும் இரண்டு நாட்களாகும்'' என்றார் பத்மநாபன். ''நீங்க வேறே இந்தக் குளிரைக்கூட யோசியாமல் பச்சைத் தண்ணியை என் மேலே கொட்டிட்டேள்!''

''பின்னே மயங்கிக் கிடந்த உங்களை எழுப்ப வழி?''

''ஆரம்பத்திலிருந்தே அந்த ஹிப்பியை ஒரு வேஷக்காரன்னு நினைச்சு வெறுத்தவள் நான் ஒருத்திதான். அதுக்காக அப்பாவிடம் எவ்வளவு 'பாட்டு' கேட்டிருக்கேன்!'' என்றாள் மீனா.

''அது சரி, ரங்கன் சொல்றதைப் பார்த்தால் உங்க இட்டம் பிசகிட்டாப் போல் இருக்கே? நீங்க வேறு எங்கேயோ வலை விரிச்சிருக்க, உங்களால் சீண்டி விடப்பட்ட புலி வேறே எங்கேயோ பாய்ஞ்சுடுத்தே!'' என்றார் பத்மநாபன் நடராஜனை நோக்கி.

''உண்மைதான்; நான் தப்புக் கணக்குக்குத்தான் போட்டுட்டேன். இங்கு நடந்த கொலைகள் ஸைக்கோ செய்தவை யல்ல என்று நிரூபணமானதும் அதுவரையில் அடங்கிக் கிடந்த ஸாரநாதனின் கொலை வெறி பிரவாகமாகப் பொங்கும் என்று நான் எதிர்பார்த்தது வரை சரி. ஆனால் அவன், வதந்தியை

உடைத்து விட்டதற்காக ஆத்திரம் அடைந்து என்னைத்தான் தாக்குவான் என்று எதிர்பார்த்ததில் தவறு செய்து விட்டேன். சாதாரண மனிதனுயிருந்தால் பழி வாங்கும் எண்ணம் எழுவது இயல்பு. ஆனுல் ஸைக்கோவின் நிலே வேறு. ஓர் ஆண்மகனைக் கொல்ல வெறி எழுகிறதேயன்றி இன்னுரைக் கொல்ல வேண்டும் என்று குறிப்பாகச் சிந்திப்பதில்லே. அதனுல்தான் அவன் நேரே உங்க அறைக்கு வந்துவிட்டிருக்கிறுன்!''

''போகட்டும், நாங்க ஊர் திரும்பறதுக்கு முன்னுடி உங்களிடம் தனியாக இரண்டு வார்த்தைகள் பேசணும்'' என்ற பத்மநாபன், ''அம்புஜம், நீயும் வாயேன்'' என்று சொல்லிக்கொண்டே அவரை அப்பால் அழைத்துப் போஞர்.

பெற்றவர்கள் எதைப் பற்றிப் பேசப் போகிருர்கள் என்பது மீனுவுக்கும் ரங்கனுக்கும் தெரியாமல் இல்லே. அவர்கள் எடுக்கும் முடிவு நல்லபடியாக இருக்க வேண்டுமே என்று வேண்டிக் கொண்டாள் மீனு, குறிஞ்சி ஆண்டவனே. எதனுலோ முன்போல அவளால் ரங்கனே எதிரிட்டு நேருக்கு நேராகப் பார்க்க முடியவில்லே. தலே குனிந்தே பேசினுள்:

''காதலியிடமும் கட்டிய மனைவியிடமும் எதையும் ரகசியமாக வைக்கப் படாது என்பது இதற்காகத்தான். நீங்க ஸைக்கோவைப் பிடிக்கணும்னு போட்ட திட்டத்தை ரகசியமாகவே காப்பாற்றியிருந்தால் நான் நிம்மதியா தூங்கியிருப்பேன். ஒருவேளே அப்பாவைக் காப்பாற்ற முடியாமலே கூடப் போயிருக்கலாம்!''

''என் அப்பா கூட இதுவரை ரகசியமாயிருந்த ஒரு விஷயத்தைப் புரிஞ்சுக் கிட்டுத்தான் இதோ வரார்'' என்ருன் ரங்கன்.

அதற்கு ஏற்ருற்போல் அவரும் நெருங்கி வந்து, ''என்ன ரங்கா இது? இவங்க ரெண்டு பேரும் என்னைக் கேலி பண்ணும்படியான நிலேயில் கொண்டு வைச்சுட்டே? 'டி. ஐ. ஜி. (ஸி.ஐ.டி.) பதவி வகிக்கிறீங்க; சொந்த மகன் காதல் வயப்பட்டு விட்டான்னு தெரியலேயே உங்களுக்கு?' என்கிறுங்க. துப்பறியும் தொழிலுக்கே அவமானம் நேர்ந்து போச்சாம்!'' என்ருர்.

''உண்மையாகவே நீங்க கொஞ்சம் கூடச் சந்தேகிக்கவில்லேயா அப்பா?''

''செண்பகனூர் கல்லூரித் தோட்டத்தில் நீ நடந்துகிட்டதையும் பேசியதையும் பார்த்தப்போ சந்தேகம் தட்டிச்சு. ஆனுல் அடுத்தடுத்து ஏதேதோ வேலேகள் வரவே இதில் சிந்தனே செல்லலே.''

''ரங்கா! நான் தீர்மானிச்சுட்டேன், ஜாதி, குலம்னு தடை ஒண்ணும் சொல்லிண்டிருக்கப்படாதுன்னு. நான் பெற்றெடுத்த குழந்தையைக் காப்பாற்றியவன் நீ. நான் கட்டிய கணவனேக் காத்துத் தந்தவர் உன் அப்பா. இதற்குப் பிரதியாக நான் என்ன தான் செய்யப்படாது?''

ரங்கன் விருட்டென்று அம்புஜத்தைத் தலேநிமிர்ந்து நோக்கினுன். உறுதியான குரலில் கம்பீரமாகப் பேசினுன்: ''அம்மா! நீங்க ஏதோ கைம்மாறு செய்வது போல் மீனுவை எனக்குத் தர வேண்டாம். 'ரங்கன் என்கிற மனிதன் நல்லவன்; யோக்கியன்; உங்கள் பெண்ணைச் சந்தோஷமாக வைத்துக்கொள்வான்' என்று உண்மையில் உங்களுக்குத் தோன்றினுல் மீனுவை என்னிடம் ஒப்படையுங்கள். இல்லாவிட்டால் வேண்டவே வேண்டாம்!''

சட்டென்று அம்புஜம் ரங்கனே நெருங்கி, அவன் வலக் கரத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு ஈரமாக்கினுள். ''ரங்கா! நான் ரொம்பப் படிச்சவள் இல்லே. எந்தச் சந்தர்ப்பத்தில் எதைப் பேசணும்னு தெரியாம இப்படித்தான் ஏதாவது சொல்லிவைப்பேன். உன் உயர்ந்த குணம் பற்றி நான் இனிமேல் யாரைப் போய் விசாரிக்கணும்? மீனு உன்னே அடையப் பாக்கியம் பண்ணியிருக்கணும்னு எனக்கு நன்னுப் புரியறது. உன்னே அவள் சந்திச்சது ஆண்டவன் சோதனேயோன்னு ஆரம்பத்தில் நினேச்சேன்; ஆண்டவன் கருணென்னு இப்போ உணர்ந்துட்டேன்.''

நடராஜன் இடைமறித்தார்: ''ரங்கன்! கண்டதும் காதல் என்பார்களே,

## நாரினுல் பூவுக்கு மணம்!

கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனாருக்குச் சென்னை சேத்துப் பட்டிலே செப்டம்பர் 11ம் தேதியன்று சிறப்பாக விழாக் கொண்டாடினர்கள், தமிழ்நாடு அமைச்சர்கள் தலைமையில். அமைச்சர்களை வரவேற்கு முகமாக அங்கு காணப்பட்ட துணி 'பானர்' ஒன்றில் இப்படி எழுதப்பட்டிருந்தது:

''தியாகிகளுக்குப் புகழ் தேடி அளிக்கும் அமைச்சர்களே, வருக!''

— சா. பா.

அதுமாதிரி மீனுவும் நீயும் சந்திக்கப் பதினஞ்சோ, பதினறோ நாட்கள்தான் ஆகுது. இதற்குள் நாம் எல்லோருமாகச் சேர்ந்து ஒரு தீர்மானத்துக்கு வரது சரியில்லே. இன்னும் இரண்டு வருஷங்கள் போகட்டும். உங்க இரண்டு பேருடைய படிப்பும் முடியட்டும். அதன் பின்னரும் உங்கள் காதல் இதே அளவுக்குத் தீவிரமாக இருந்தால் கல்யாணத் தேதி பற்றி யோசிக்கலாம்.''

''இரண்டு வருஷங்கள் என்ன; இரண்டு யுகம் காத்திருப்போம்!'' என்றாள் மீனு.

''ஏய்! நீ எழுத்தாளர் மகள் என்கிறதை நிரூபிக்கிற மாதிரி பேசறே. என்னால் அவ்வளவு காலம் காத்திருக்க முடியாது!'' என்றான் ரங்கன்.

எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். அதனூடே நடராஜன் குரலை உயர்த்தி, போலீஸ் அதிகாரி என்ற ஹோதாவில் பேசுவது போல் கண்டிப்புடன் கூறினார்: ''இந்த இரண்டு வருஷங்களும் நீங்க அடிக்கடி சந்திக்கலாம்; ஆனா அது பெரியவங்க முன்னிலையில் தான் நடக்கணும்!''

* * *

'ஸூயிஸைட் பாயிண்ட்' அருகே, கால்ஃப் மைதானத்தில் அப்பாவும் பிள்ளையும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். கால்களை அகட்டிப் பந்துக்கு இருபுறமும் வைத்து, கால்ஃப் க்ளப்பைக் கையில் கச்சிதமாகப் பிடித்து, உடலை இலேசாக அசைத்துக் குறி பார்த்துக் கொண்டு பின்னர் 'க்ளப்'பை உயர்த்தி 'விஷ்ஷ்' என்று ஒலி எழுப்புகிறாற்போல் வேகமாகக் கீழே கொணர்ந்து பந்தைத் தாக்கினார் நடராஜன். பந்து 'ஜிவ்' வென்று மேலே கிளம்பி, அவர் எதிர் பார்த்த திக்கில் ஓர் அரை வட்டம் அடித்து இறங்கியது.

''பியூட்டிஃப்புல் ஷாட்!'' என்றான் ரங்கன். இருவரும் பந்து இருந்த திசை நோக்கி நடந்தார்கள். அப்பாவின் பக்கத்தில் இப்படிப் போகும் போது ரங்கன் கேட்டான்: ''அப்பா! என்னைத் தப்பா நினைக்காதீங்க. ஆனால் ஒரு சந்தேகத்தைத் தெளிவுபடுத்திக்காமல் இருக்க என்னால் முடியவில்லை. ஸாரநாதனை நீங்க கொன்றுதான் இருக்க வேண்டுமா? பத்மநாபனைக் காப்பது ஒன்றுதான் நோக்கம் என்றால், உங்க துப்பாக்கியின் அடிவாரத்தைக்கொண்டு ஸாரநாதனின் தலையில் சரியான இடத்தில் நீங்க ஒரு தட்டுத் தட்டியிருந்தால் போதுமே? அவன் மயங்கி விழுந்திருப்பான். அவனைச் சிறைப்படுத்தியிருக்கலாம், இல்லையா?''




நடராஜன் தொண்டையைக் கனைத்துக்கொண்டார். ஓர் இக்கட்டான நிலையில் சிக்கிக்கொண்ட பாவம் முகத்தில் தெரிந்தது.

''ரங்கன்!'' என்று ஆரம்பித்து மறுபடியும் தொண்டையைக் கனைத்துக் கொண்டு இலேசான தடுமாற்றத்துடன் பேசினார்:

''உனக்கு மட்டும் சொல்றேன், ரங்கா! ப்ளீஸ் கீப் இட் எ ஸீக்ரெட்! ஸாரநாதனை மறுபடியும் விசாரணைக்குக் கொண்டுவர எனக்கு விருப்பமில்லை. அவன் நலனுக்காக வாதாடுவதாகச் சொல்லிக் கொண்டு தனக்குப் பிராபல்யத்தைத் தேடிக் கொள்ள மறுபடியும் ஒரு வக்கீல் வருவான். மனோதத்துவ நிபுணரையும் அழைப்பான். நீதிபதி, ஸாரநாதனுக்கு மனோவியாதி என்பதால் தூக்குத்தண்டனை விதிக்க மாட்டார். ஆயுள் தண்டனை அடைந்து சிறைவாசம் செய்கிறவன், மறுபடியும் கொலை வெறிக்கு உள்ளாகும்போது, ஏமாந்து போய் அவனிடம் அகப்பட்டுக் கொள்ளும் ஒரு சிறைச்சாலை சிப்பந்தியைத் தீர்த்துக் கட்டிவிடலாம் அல்லது சக கைதி ஒருவனை அல்பாயுசில் எமனுலகுக்கு அனுப்பி வைக்கலாம். ஏன், மீண்டும் ஒரு முறை அவன் போலீஸ் காவலிலிருந்து தப்பி ஓடிவிட்[illegible] வியப்பதற்கில்லை.

''இம்மாதிரியெல்லாம் [illegible] தவிர்க்கத்தான் நான் அவ[illegible] விட்டேன். ஆனால் உன்[illegible]

வேறு யாராவது இதுபற்றி என்னைக் கேட்டால், ஒரு தீர்மானத்துடன் நான் செயல்பட்டதாகச் சொல்ல மாட்டேன். பத்மநாபனைக் காக்க வேண்டுமே என்ற கவலையும் அவசரமும் மேலோங்கிய அந்தத் தருணத்தில் துப்பாக்கியை இயக்குவதைத் தவிர எனக்கு வேறொன்றும் தோன்றவில்லை என்றுதான் விளக்கம் தருவேன்!''

ரங்கன் யோசித்துக் கொண்டே நடந்தான் தகப்பனுருடன். அரை நிமிஷம் கழித்து, ''நீங்க செய்ததுதான் சரின்னு எனக்குத் தோணுது அப்பா!'' என்றான்.

''தாங்க்யூ, மை ஸன்! தாங்க்யூ!'' என்றார் நடராஜன், டி. ஐ. ஜி., ஸி. ஐ. டி.



# முடிவுரை

நடராஜனையும் ரங்கனையும் மலை மேலே விட்டுவிட்டுப் பத்மநாபன் குடும்பம் புறப்பட்டது. வளைந்து நெளிந்து சென்ற சாலை வழியே கீழே இறங்கிய பஸ், இடையில் ஒரு சிற்றூரில் சில நிமிஷங்கள் நின்றது. மலைப் பாதையின் முடிவுக்கு அவர்கள் இன்னும் வந்து விடவில்லை. இரு புறமும் பசுஞ் சோலைகள்- மா, பலா, வாழை என்று பலவிதத் தோப்புக்கள். பஸ்ஸின் ஓசை நின்றதும் பட்சி ஜாலங்களின் பலவித மான குரல் ஒலிகளைக் கேட்க முடிந்தது. இத்தனை நாட்களாகத் தான் உணர்ந்தறியாத குதூகல த்வனியுடன் அந்தப் பட்சிகள் சப்தம் எழுப்புவதாக மீனுவுக்குத் தோன்றியது.

ஆனந்தம் பிரவாகமாகப் பொங்கும் மீனுவின் உள்ளத்துக்கு இனி காண்பன, கேட்பன எல்லாமே ஒரு புதிய எழிலுடனும், முன்னினும் அதிகமான இனிமையுடனும்தானே விளங்கும்! பட்சிகளின் குரலொலிகளை அவள் தனித் தனியே எண்ண ஆரம்பித்தாள். குறைந்தபட்சம் ஆறு விதமான பறவைகள் அவ்விடத்தில் இருப்பதாகக் கணக்கிட்டாள்.

பத்மநாபன் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவர் போல் சிரித்தார்.

''எதற்குச் சிரிக்கிறேள்? சொல்லி விட்டுச் சிரியுங்களேன்'' என்றாள் அம்புஜம்.

''நம்ம இருச்சேறையை நினைச்சுண்டேன் சிரிப்பு வந்துடுத்து! அவர் ஒரு கல்யாண விருந்தின்போது என்ன பண்ணினார் தெரியுமா? பால் பாயஸத்தை உள்ளங்கையில் வாங்கி வாங்கிப் பாக்கெட்டிலே விட்டுண்டார்!''

''நிஜமாகவா? இப்படி யாராவது பண்ணுவாளோ?'' என்றாள் அம்புஜம்.

கல்யாணம் என்ற சொல்லைக் கேட்டதுமே மீனுவுக்கு உடலெல்லாம் புல்லரித்தது.

''காரணம் இல்லாமல் போகலை'' என்று கதையைத் தொடர்ந்தார் பத்மநாபன்: ''வயிறு சரியில்லைன்னு சொல்லியிருக்கார். யாரோ ஒருத்தன் விஷமத்தனமாக 'இந்தாரும் லேகியம்'னு உருட்டித் தந்திருக்கான். அதில் அபின் கலந்திருப்பது தெரியாமல் ஒண்ணுக்கு ரெண்டாச் சாப்பிட்டுட்டார்!''

''அப்புறம் என்ன, பாயஸத்தைப் பாக்கெட்டில் மட்டுமா, பையில் கூட நிரப்பிண்டு போகலாம்னு தான் தோணும்!'' என்று கூறிச் சிரித்தாள் அம்புஜம்.

பஸ் நகர்ந்தது.

''நான் சொல்றது ரொம்ப நாட்கள் முன்னாடி. நாலு நாட்கள் கல்யாணம் நடந்த காலம்'' என்றார் பத்மநாபன்.

''நாலு நாட்கள் இல்லா விட்டாலும் உங்க பெண்ணுக்கு ரெண்டு நாள் கல்யாணமாவது நடத்தி யாகணும், நினைவிருக்கட்டும்.''

''நல்ல வேளை; இரண்டு வருஷங்கள் டயம் இருக்கே, அதுக்குள்ளே பணம் காசுக்கு ஏதாவது ஒரு ஏற்பாடு பண்ணினால் போச்சு.''

மீனுவுக்குத் தானும் ரங்கனும் மணக்கோலத்தில் நிற்கும் காட்சி மனத் திரையில் ஓடியது.

அதே சமயம், அனசூயா தன் கையிலிருந்த டிரான்ஸிஸ்டர் ரேடியோவை முடுக்கி விட, சொல்லி வைத்தாற்போல் திருச்சி வானொலி நிலையத்திலிருந்து காருகுறிச்சி அருணாசலத்தின் நாதஸ்வர இன்னிசை கன ஜோராகக் கேட்டது!

''அக்காவுக்குக் கல்யாணம் வரப் போறதோன்னோ, அதுக்குத்தான் ரேடியோலே டும்முடக்கா வைச்சிருக்கா!'' என்றான் விசு.

மேனி சிலிர்க்க ஆனந்த பரவசமாகி அவனைக் கட்டி அணைத்து முத்தமிட்டாள் மீனு.

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

**நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3**




**இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்**

# நிரோத்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான
கருத்தடைச் சாதனம் நிரோத்.

davp 71/460

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது



# இந்த தீபாவளிக்கு 10% விசேட தள்ளுபடி

வண்ணத்துப் பூச்சியின் பிரத்தியேக-மான கவர்ச்சி உங்களுக்கு புத்தொளி-யும், புதுப்பொலிவும் தரும். புத்தம் புதிய கையிருப்பு- நவீன நாகரிக டிசைன்கள், புரட்சிகரமான மாதிரிகள், ஒவ்வொரு கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களி-லும் கிடைக்கும்.

புகழ் பெற்ற காஞ்சிபுரம், ஆரணி, மற்றும் கும்பகோணம் பட்டுகள், பர-வசம் தரும் பருத்தி ஆடைகள், கிளாசிக் ரெடிமேட் கைத்தறி ஷர்ட்டு-கள், மற்றும் பட்டு டைகள் கிடைக்கும்.

வண்ணத்துப்பூச்சி உங்கள் நல்வரவுக்-காக நாடெங்கிலுமுள்ள முன்னூற்று ஐம்பது விற்பனை நிலையங்களில் காத்திருக்கிறது.

வண்ணத்துப்பூச்சி 10% விசேட தள்ளு-படியில் தருகிறது. (தள்ளுபடியை தமிழக் அரசு ஏற்றுக் கொள்கிறது) தமிழக அரசு ஊழியர்களுக்கு கடன் வசதித் திட்டம் வழக்கம் போல் வழங்கப்படும்.

**விசேட தள்ளுபடி 1—10—'72 முதல் 9—11—'72 வரையில்.**

கோ-ஆப்டெக்ஸ்  கைத்தறிஆடைகள்

Criterion CO 2779TMB




# பெண்குலம் விரும்பாத வரிவிதிப்பு!

பெண்களுக்கென எத்தனை கல்லூரிகள் திறந்தாலும் இட நெருக்கடி தீராத அளவுக்குப் பெண்கள் இன்று படித்துப் பட்டங்கள் பெற்றுப் பல்வேறு துறைகளில் பணியாற்றி வருகின்றனர். ஆனால் பாரத அரசின் நிதித் துறையினர் இது கண்டு பூரித்துப் போய்விடவில்லை. போகட்டும்; வளர்ச்சிக்குத் தடை போடாமலாவது இருக்கலாமல்லவா? முட்டுக்கட்டை போட முன்வந்துள்ளனர்.

இந்த அநீதியை எதிர்த்து, சென்னையில் உள்ள இருபத்தைந்து மாதர் நிறுவனங்கள், சங்கங்கள் ஆகிய அமைப்புக்களின் பிரதிநிதிகள் இம்மாதத் தொடக்கத்தில் மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் அரங்கில் கூடி ஒரு தீர்மானம் நிறைவேற்றினர். இது பற்றி திருமதி சரோஜினி வரதப்பனிடம் விளக்கம் கோருகிறோம். அவர் கூறுவதாவது:

''ஒரு குடும்பத்தில் கணவன் மனைவி இருவருமே வேலை செய்து சம்பாதித்தால், மனைவியின் வருமானத்தையும் கணவனுடைய வருமானத்துடன் இணைத்து மொத்த வருமானத்துக்கும் இனிமேல் வரி விதிக்கப் போகிறார்களாம். இன்று விலைவாசிகளின் ஏற்றத்தால் கணவனுடைய சம்பளத்தைக் கொண்டு மட்டுமே காலந் தள்ள முடியாது என்றுதான் மனைவியும் வேலைக்குப் போக வேண்டியுள்ளது. குழந்தைகளுக்கு நல்ல கல்வி வசதி அளிக்க வேண்டுமானால், கடன் வாங்காமல் குடித்தனம் செய்ய வேண்டுமானால் மனைவியும் சம்பாதித்தால்தான் முடியும் என்ற நிலை உருவாகியுள்ளது. குறிப்பாக, நடுத்தரக் குடும்பங்களின் நிலை இதுதான். மனைவிக்கு நிலம், வீடு ஏதாகிலும் கொஞ்சம் சொத்து இருந்தால் அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தையும் சேர்த்துக் கணக்கிட்டு வரி விதிக்கத் தீர்மானித்துள்ளனர். இப்படி ஒரு யோசனையை ஏற்கனவேயே, அதாவது திருமதி இந்திரா காந்தி செய்தித் துறை அமைச்சராக இருந்த போதே அரசு செயலாக்கத் திட்டமிட்ட போது நாங்கள் எதிர்த்து முறையிட்டோம். அப்போது கைவிட்ட யோசனையை இப்போது மீண்டும் அமுலாக்கப் போகிறார்களாம்.''

''அரசு வருவாயைப் பெருக்க இப்படி ஒரு திட்டம் வகுத்திருக்கும்.''

''வருவாயைப் பெருக்க எத்தனையோ வழிகள் இல்லையா? வரிகொடாமல் ஏமாற்றுபவர்களிடம் நிர்ப்பந்தம் செய்து வசூலித்தாலே போதும், நிதி நிலைமை திருப்திகரமாக மாறும். அதை விடுத்து இப்படி ஒரு விபரீத முயற்சியை மேற்கொள்வானேன்?''

''இதை 'விபரீதம்' என்று நீங்கள் எவ்வாறு கருதுகிறீர்கள்?''

''ஆண்கள் சிலர் ஊதாரித்தனமாகச் செலவு செய்கிறார்கள். இதை மறுப்பதற்கில்லை. மனைவியையும் குடும்பத்தையும் உதாசீனம் செய்துவிட்டுப் பொறுப்பற்று வாழும் ஆண்களும் இல்லாமல் இல்லை. இம்மாதிரி நிலையில் குடும்பத்தைக் கட்டிக் காப்பதற்கு மனைவியின் வருமானம் வெகுவாகப் பயன்படும். இந்த வருமானத்தைக் கணவனுடைய வருமானத்துடன் இணைத்து மொத்தத் தொகைக்கும் வரி போடுவது நியாயமா? பணக்காரர்களுக்காக நாங்கள் வாதாடவில்லை. அவர்களுக்கு வசதி உண்டு. நடுத்தரக் குடும்பங்களின் அவலநிலை இப்புதிய வரிவிதிப்புத் திட்டத்தால் பாதிக்கப்படும் என்பது உறுதி. இதையெல்லாம்விட முக்கியம் ஒரு பெண்ணின் வருமானத்தைக் கணவனின் வருமானத்துடன் இணைத்துப் பார்ப்பதின் மூலம் அவளுடைய அடிப்படை உரிமை, தனி மனித சுதந்திரம் பாதிக்கப்படுகிறது.''

''சரி; இந்த வரிவிதிப்பை எதிர்த்துத் தீர்மானம் உருவாக்கினீர்கள். அப்புறம்?''

''ஜனாதிபதி சென்னை வந்தபோது அவரைச் சந்தித்து நிலைமையை எடுத்துரைத்து மகஜர் கொடுத்திருக்கிறோம். அனுதாபத்துடன் கவனிப்பதாக அவரும் கூறியுள்ளார். ஆறு பேர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறோம். இந்த யோசனையைக் கைவிடும்படி கோரிப் பெண்மணிகளிடம் கையெழுத்து வாங்கி அரசுக்கு அனுப்பி வைக்கப் போகிறோம். 'பெண்களுக்குச் சொத்துரிமை உண்டு' என்று சட்டமியற்றினார்களே அந்தச் சட்டத்தினால் ஏற்படக்கூடிய நன்மை இவ்வரி விதிப்பினால் பறி போய்விடும். வயோதிகப் பருவத்துக்கு, பெண்களின் கல்யாணங்களுக்கு என்று இல்லத்தரசி சேமித்து வைக்கவும் வழி இல்லாமல் போய்விடும். இந்த வரிவிதிப்பினால், எப்படிப் பார்த்தாலும் இது பிற்போக்குத் திட்டமே!'' என்கிறார் திருமதி சரோஜினி.

— பா. பானுமதி





# "ஹிம்ஸையே பரமதர்மம்!"

## பிரேம்சந்த்

உலகில் இப்படியும் சில பேர்கள் உண்டு. யாருக்கும் கைகட்டிச் சேவகம் புரியாமல், எல்லோருக்கும் ஊழியம் புரிவார்கள். அவர்களுக்கென்று ஓர் அலுவலும் இருக்காது. ஆனால் தலைதூக்க நேரம் இராது; அத்தனை வேலையிருக்கும்.

அப்படிப்பட்டவர்களிலே ஜாமித் ஒருவன். அவன் கவலை என்பதையே அறியாதவன். யாருடனும் நட்பும் இடையாது; பகைமையும் இடையாது. ஒருவன் சிரித்துப் பேசிவிட்டால் போதும், அவனுக்கு உச்சி குளிர்ந்துவிடும். கூலி பெறாத அடிமையாகிவிடுவான். மாடாக உழைப்பதில் அவனுக்கு என்னதான் ஆனந்தமோ? யாராவது நோய்வாய்ப்பட்டால், அழையாமலே அவர்களுக்குப் பணிவிடை புரிய வந்துவிடுவான். நள்ளிரவு நேரத்தில் வைத்தியர் வீட்டுக்குப் போக வேண்டுமா? காத தூரம் நடந்து மருந்துப் பச்சிலைகள் பறித்து வரவேண்டுமா? சொல்ல வேண்டியதுதான் தாமதம்: செயலில் இறங்கி விடுவான். யாராவது ஏழை எளியவர்களுக்குக் கொடுமை இழைக்கப்பட்டால், அவனால் பார்த்துக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. அவனைக் கொன்றே போட்டாலும் கொடுமைக்குப் பரிகாரம் தேடாமல் அவனால் இருக்க முடியாது. இதுபோல் ஒன்றா, இரண்டா, நூற்றுக் கணக்கான தருணங்கள் அவனை எதிர்கொண்டுள்ளன. காவல் துறையினரோடு தினம் பொழுது விடிந்தால், பொழுது போனால் அவனுக்கு ஏதாவது கணக்கும் பிணக்கும் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். இப்படி ஊருக்கு உழைத்தும் அவன் அடைந்த பட்டம் 'அசடு, பிழைக்கத் தெரியாதவன்' என்பதுதான். மெய்தானே? எவனொருவன் பிறருடைய பெருஞ் சுமையைப் பார்த்து, அதைப் பிடுங்கித் தன் தலையில் வலுக் கட்டாயமாகச் சுமந்து கொள்கிறானே, பிறர் வீட்டுக் கூரை வேயவோ, பற்றிய தீயை அணைக்கவோ காத தூரம் ஆனாலும் ஓடி உதவ முயல்கிறானே, அவனை யார் சமர்த்தன் என்று கூறுவார்கள்? சாராம்சம் என்னவென்றால், அவனைப்போன்றவர்களால் பிறருக்குப் பயன் உண்டு; சொந்தத்துக்கு ஒரு பயனும் இடையாது. ஆகக்கூடி, அவன் பசித்த வயிற்றுக்குப் பிறர் கையையே எதிர்நோக்க வேண்டியிருக்கது.

பைத்தியம் அவன்! அவனது இந்தப் பைத்தியக்காரத்தனத்துக்காகப் பிறர் வருந்தினர்!

'உன் வாழ்க்கையை நீ எதற்காக வீணடிக்கிறாய்? பிறர் எக்கேடுகெட்டுப்போனால் என்ன? அவர்களுக்காக நீ இப்படி உயிரை விடுவானேன்? உன்னை யாராவது வருந்தி வேண்டுகிறாரா? நாளைக்கு நீ தலையை, காலை வலித்துப் படுத்தால் ஒரு வாய்த் தண்ணீருக்கு எவனுமே கேட்க மாட்டான். பிறருக்கு நீ பணிவிடை செய்யும்வரையில் உனக்குப் பிச்சை போடுவதாக எண்ணி உணவு அளிப்பார்கள். உனக்கு ஏதாவது சங்கடம் நேர்ந்தால் யாரும் உன்னைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார்கள்!'

ஜனங்கள் இப்படி ஏசி நொந்த பின்தான் ஜாமியின் கண்கள் திறந்தன. 'இவர்கள் கூறுவதில் உண்மை இருக்கும் போலிருக்கிறதே!' என்ற எண்ணம் எழுந்தது. பாத்திரம் பண்டம் என்று அவனிடம் ஏதும் இல்லை. எனவே ஒரு நாள் காலை எழுந்ததும் அவன் ஒரு திக்கை நோக்கி நடையைக் கட்டினான்.

இரண்டு நாட்களுக்குப் பின் ஒரு நகரத்தை அடைந்தான். பெரிய நகரம் அது! கட்டிடங்கள் வானத்தோடு உரையாடின. சாலைகள் அகலமாகவும் சுத்தமாகவும் இருந்தன. கடைத் தெருக்கள் அழகாக இருந்தது. மசூதிகளும் கோயில்களும் வீடுகளைக் காட்டிலும் அதிகம் என்று கணக்கிட்டுக் கூற முடியா விட்டாலும் குறைவாயில்லை என்பதுமட்டும் உறுதி. நாட்டுப்புறத்தில் மசூதியும் இல்லை; கோயிலும் இல்லை. இஸ்லாமியர்கள் ஒரு மேடை அமைத்துத் தொழுகை நடத்தினார்கள். ஹிந்துக்கள் ஒரு மரத்தடியில் கல் நட்டு நீரூற்றி வழிபட்டார்கள். நகரத்தில் தர்மத்தின் இந்தப் பெருமையைக் கண்டு ஜாமித்துக்கு வியப்பும் விந்தை உணர்வும் ஏற்பட்டன. மதத்துக்குக் கிட்டும் மரியாதை வேறு எந்த



லோகாயதப் பொருளுக்கும் கிட்டவில்லை என்பதை அவன் கண்டான். இவர்கள்தான் எவ்வளவு கடவுள் பற்றுக் கொண்டவர்களாக, உண்மையாளர்களாக இருக்கிறார்கள்? இவர்களிடம் எத்தனை இரக்க உணர்வு, பகுத்தறிவு, அநுதாப குணம் ஆகியவை இருக்கும்?

அதனால்தான் ஆண்டவன் இவர்களுக்கு இத்தனை பெருமை அளித்திருக்கிறான் என்ற எண்ணம் அவன் மனத்தில் ஓடியது. எனவே, அவன் வருகிறவர்களையும், போகிறவர்களையும் பக்தி சிரத்தையோடு பார்த்தான். அவர்களுக்குத் தலை வணங்கி மரியாதை காட்டினான். அங்கு உள்ளவர்கள் அனைவரும் அவனுக்குத் தெய்வமாகத் தோன்றினர்.

ஊரைச் சுற்றுவதிலேயே பொழுது போய்ப் பொழுது சாய்ந்து விட்டது. அவன் களைத்துப் போய் ஒரு கோவில் மேடையில் உட்கார்ந்தான். கோயில் மிகப் பெரியது. மேலே பொன் கவசம் பளபளத்துக் கொண்டிருந்த கருவறையைச் சுற்றிச் சலவைக் கல் பதித்திருந்தது. நடையில் எல்லாம் சலவைக் கல்கள் வரிசை போடப்பட்டிருந்தது. ஆனால் பிராகாரத்தில் சாணியும் குப்பையுமாக இருந்தது. ஜாமித்துக்கு அழுக்கைக் கண்டால் பிடிக்காது. பற்றிக்கொண்டு வரும். கோவிலின் இந்த நிலையைக் காண அவனுக்குச் சகிக்கவில்லை. எங்கேயாவது விளக்குமாறு கிடைத்தால் குப்பையைக் கூட்டிக் குவிக்கலாமே என்று சுற்று முற்றும் பார்த்தான். ஆனால் எங்கும் விளக்குமாற்றைக் காணோம். வேறு வழி தோன்றாமல் போகவே தன் துண்டினாலேயே பிராகாரத்தைச் சுத்தம் செய்யலானான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பக்தர்கள் கூட்டம் வரலாயிற்று. ஜாமித் பிராகாரத்தைத் துப்புரவுபடுத்துவதைக் கண்டு அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளலாயினர்.

"இஸ்லாமியன் போலிருக்கிறதே!"

"இருக்காது. யாரோ பைத்தியம் என்று நினைக்கிறேன்!"

"டேய், யார் நீ? எங்கே இருக்கிறாய்?"

"நான் வெளியூர்க்காரன் சார்! ஆண்டவனின் ஆலயத்தைப் பார்த்தேன். வந்து உட்கார்ந்துகொண்டேன். குப்பையாகக் கிடந்தது. தர்மவான்கள் வரும் இடமாயிற்றே என்று எண்ணினேன். சுத்தம் செய்யலானேன்!"

"நீ முஸல்மான்தானே?"

"ஆண்டவன் எல்லோருக்கும் ஆண்டவன்தானே? ஹிந்து என்ன, முஸல்மான் என்ன? எல்லோரும் அவனுக்கு ஒன்றுதானே?"

"ஆண்டவனிடம் நம்பிக்கை உண்டா?"

"ஆண்டவனிடம் யாருக்குத்தான் நம்பிக்கை இராது, ஐயா? படைத்தவனை நம்பவில்லை என்றால் வேறு யாரை நம்புவேன்?"

பக்தர் குழாம் யோசித்தது.

"நாட்டுப்புறத்தான் போலிருக்கிறது!"

"விடக்கூடாது இவனை. வலையில் போட்டுக் கொள்ள வேண்டும்."

## 2

ஜாமித் வலையில் போட்டுக் கொள்ளப்பட்டான். அவனுக்கு மரியாதை மட்டின்றிக் கிடைத்தது. தங்குவதற்குக் காற்றோட்டமான வீடு கொடுக்கப்பட்டது. இரண்டு வேளைகளும் நல்ல உணவு வழங்கப்பட்டது. இரண்டு மூன்றுபேர் எப்போதும் அவனைச் சூழ்ந்தவண்ணம் இருந்தனர். ஜாமித்துக்குப் பஜனைப் பாடல்கள் நன்கு நினைவிருந்தன. குரலும் நன்றாக அமைந்திருந்தது. அவன் தினமும் கோயிலுக்குச் சென்று பாடலானான். பக்தியோடு இசையின் இனிமையும் இருந்து விட்டால் கேட்க வேண்டுமா? அவன் பாடல்கள் மக்களின் மனத்தில் இடம்பற்றின. எத்தனையோ பேர் இசையினால் கவரப்பட்டுக் கோயிலுக்கு வரலாயினர். ஆண்டவன் தேடிப் பிடித்துத்தான் இவனை அனுப்பியிருக்கிறார் என்ற நம்பிக்கை எல்லோருக்கும் ஏற்பட்டு விட்டது.

ஒரு நாள் கோயிலில் நல்ல கூட்டம் கூடியது. பிராகாரத்தில் விரிப்பு விரிக்கப்பட்டது. ஜாமித்துக்கு முடியிறக்கிப் புதுத் துணிகள் அணிவித்தனர். ஹோமம் நடந்தது. ஜாமித்தின் கையினால் இனிப்பு வழங்கப்பட்டது. அவன் தனக்கு இடம் அளித்தவர்களின் உதார குணத்தையும் தர்மத்தில் ஈடுபாட்டையும் கண்டு அயர்ந்து போய்விட்டான். அவன் நம்பிக்கை மேலும் வலுப்பட்டது. இவர்கள்தான் எத்தனை நல்லவர்கள்? என்னைப் போன்ற இழிநிலையில் உள்ள வேற்றூரானுக்கு என்ன மதிப்புத் தருகிறார்கள்! இதைத்தான் உண்மையான தர்மம் என்கிறார்கள் போலும்! ஜாமித்துக்குத் தன் வாழ்க்கையில் இத்தகைய பெரு மதிப்பு இது காறும் கிட்டியதில்லை. அசடு, பிழைக்கத் தெரியாதவன் என்று எவனை எள்ளி நகையாடினார்களோ, ஊர் சுற்றி, தான்தோன்றி என்று ஏசினார்களோ, அவன் பக்தர்களின் தலை மகுடமாக விளங்கினான். நூற்றுக் கணக்கான மக்கள் அவனைப் பார்க்கவென்றே கூடினர்.

ஒரு நாள் ஜாமித் பல பக்தர்களுடன் உட்கார்ந்து புராணம் வாசித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது தெருவிலே நல்ல பலசாலியான இளைஞன் ஒருவன் பலமற்ற கிழவன் ஒருவனைப் போட்டு அடித்துக் கொண்டிருந்தான். நெற்றியிலே சந்தனப் பொட்டும், பூணூலும் அணிந்திருந்த அந்த வாலிபனுக்கு என்ன வந்து விட்டது, அப்படிக் கண் மூஞ்சி தெரியாமல் கிழவனை அடிக்க? கிழவன் குய்யோ முறையோ என்று கூச்சலிட்டான். கெஞ்சினான்; காலைப் பிடித்தான். 'ஐயா! என் குற்றத்தை மன்னித்து விடுங்கள்! இனி இத்தகைய காரியம் செய்யமாட்டேன்' என்று மன்றாடி வேண்டினான். அப்படியும் அந்த இளைஞனுக்கு அவன் மீது சிறிதும் இரக்கம் பிறக்கவில்லை.

அதைக்கண்ட ஜாமித்தின் ரத்தம் கொதித்தது. இதுபோன்ற காட்சிகளைக் கண்டு அவனால் சும்மா உட்கார்ந்திருக்க முடியாதே. ஒரே தாவலாகத் தாவித்தெருவுக்கு வந்தான். இளைஞன் எதிரில் போய் நின்றுகொண்டு, "இந்தக் கிழவனைப் போட்டு எதற்காக இப்படி அடிக்கிறாய்? உனக்கு ஈவு இரக்கமே கிடையாதா?" என்று கேட்டான்.

"இவன் கோழி எங்கள் வீட்டுக்குள் நுழைந்து வீடு முழுவதையும் அசிங்கப் படுத்தி விட்டது."

"உன் வீட்டை அசிங்கப்படுத்தி வருவதற்கு இவன் தன் கோழிக்குக் கற்றுக் கொடுத்திருந்தானா?"

''எசமான்! நான் எப்போதும் கூடை போட்டுத்தான் மூடி வைத்திருப்பேன். இன்று என் அஜாக்கிரதையினால் தவறு நேர்ந்துவிட்டது. எசமான்! என் தவற்றை மன்னியுங்கள்! என்று மன்றாடுகிறேன். கேட்க மாட்டேன் என்கிறார். இவர் என்னை அடித்து அடித்துக் குற்றுயிரும் குலையுயிருமாக ஆக்கிவிட்டார்!'' என்றான் கிழவன்.

''இன்னும் அடிக்க வில்லை; இனிமேல்தான் அடிக்கப் போகிறேன். வெட்டிப் புதைத்து விட்டுத்தான் மறு காரியம்!''

''வெட்டிப் புதைக்கிற ஆளைப் பாரு! இனி மேல் இவர் மேல் கையை வைத்தால் நீ உருப்படியாக விடு போய்ச் சேர முடியாது. தெரிந்து கொள்!'' என்றான் ஜாமித்.

## 1-10-72 கோகுலம் இன்று விற்பனையாகிறது. வாங்கி விட்டீர்களா?



இளைஞனுக்குத் தன் பலத்தில் ஓர் இறுமாப்பு. அந்தத் தைரியத்தில் மீண்டும் அவன் கிழவன் மீது கைபோட்டு அடித்துவிட்டான். ஆனால் அடுத்த அடி விழுவதற்குள்ளாக ஜாமித் அவன் கழுத்தை இறுகப் பிடித்துக் கொண்டான். இருவருக்கும் இடையே மற்போர் நிகழ்ந்தது. ஜாமித் சரியான பயில்வான். இளைஞனைத் தள்ளின தள்ளில் ஒரு மூலையில் போய் விழுந்தான். அவன் விழுந்ததும் இதுவரையில் கோயிலில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பக்தர்கள் கூட்டம் 'லபக்'கென்று பாய்ந்து வெளியே வந்தது. நாற்புறத்திலும் சூழ்ந்து ஜாமிதைத் தாக்கியது. 'இவர்கள் ஏன் என்னை இப்படி அடித்து நொறுக்குகிறார்கள்?' ஜாமித்துக்கு விளங்கவில்லை. யாரும் எதுவும் அவனைக் கேட்கவில்லை. புடைத்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த இளைஞனை அவர்கள் ஒன்றுமே சொல்லவில்லை. நெருங்கியவனெல்லாம் ஜாமித் மீதுதான் கைவைத்தான். கடைசியில் பொறுக்க முடியாமல் ஜாமித் மூர்ச்சித்து விழ்ந்து விட்டான். அப்பொழுது மக்களிடையே பேச்சு எழுந்தது.

''பயல் மோசம் செய்து விட்டான்!''

''சாதிக் குணம் போகுமா? இந்த மிலேச்சர்களிடம் நல்லதை எதிர்பார்க்க முடியாது. இனம் இனத்தோடுதான் சேரும். நீசர்கள் நீசத்தனமான காரியம்தான் செய்வார்கள். இவனை யாரும் கேட்கவில்லை; கோவில் குப்பையைக் கூட்டச் சொல்லி! உடலை மூட ஒரு முழத் துணி இல்லாமல் வந்தான். நாம் இவனுக்கு வேண்டிய ஆதரவு காட்டி, மிருகமாக இருந்தவனை மனிதனாக்கினோம். இருந்தாலும் இவன் நம்முடையவனாகவில்லை; நாயைக் குளிப்பாட்டி நடு அறையில் வைத்த கதைதான்!''

''இவர்களுடைய மதத்தின் ஆணிவேரே அதுதானே!''

ஜாமித் இரவு முழுவதும் சாலை ஓரத்தில் கிடந்தான். வலி தாள மாட்டாமல் முனகிக் கொண்டிருந்தான். அவனுக்கு அடிபட்டதற்காகக்கூட வருத்தம் ஏற்படவில்லை. அது போன்ற துன்பங்கள் அவன் எத்தனையோ அநுபவித்திருக்கிறான். அவனுக்கு வருத்தமும் வியப்பும் ஏற்பட்டதற்கு ஒரே காரணம் இது தான்: ஒருநாள் இவர்கள் மதிப்பும் மரியாதையும் கொடுத்துத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடினார்களே! இன்று காரணமின்றி ஏன் இப்படி அடித்து நொறுக்கினார்கள்? தேவர்களாகப் பழகியவர்கள் ஏன் அசுரர்களானார்கள்?

இரவு முழுதும் அவன் இதே சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். விடியற்காலை எழுந்து வேறு புறமாகச் சென்றான்.

### 3

ஜாமித் சிறிது தொலைவுதான் சென்றிருப்பான். அதே கிழவன் அவனை வழியில் சந்தித்தான். அவனைப் பார்த்ததும் கிழவன் கூறினான்: ''ஆண்டவன் மீது ஆணை! நேற்று நீதான் என் உயிரைக் காப்பாற்றினாய்! அதற்காக அந்தப் படுபாவிகள் உன்னை அடித்து நொறுக்கி விட்டார்கள் என்று கேள்விப்பட்டேன். நான் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் தப்பி ஓடிவிட்டேன். ஆமாம், இதுவரை நீ எங்கே இருந்தாய்? இங்குள்ளவர்கள் நேற்று இரவிலிருந்தே உன்னைப் பார்ப்

பதற்குத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். காஜி ஸாஹப் நேற்றிரவே உன்னைத் தேடிப் புறப்பட்டார். ஆனால் நீ கிடைக்கவே இல்லையாம். நாம் இருவரும் நேற்று தனியாக மாட்டிக் கொண்டு விட்டோம். அதனால்தான் பகைவர்கள் அடித்து விட்டார்கள். அப்பொழுது தொழுகை நேரம் வேறு. எல்லாரும் மசூதியில் இருந்தார்கள். இந்தச் செய்தி முனுக்குத் தெரிந்திருந்தால் போதும், ஆயிரக்கணக்கில் அடியாட்கள் தடியும் கையுமாகத் தடதடவென்று விரைந்து வந்திருப்பார்கள். அப்பொழுது புரிந்திருக்கும்!''

ஜாமிதை அழைத்துக் கொண்டு அந்தக் கிழவன் காஜி ஜோராவர் ஹுஸைன் வீட்டுக்குச் சென்றான். காஜி ஸாஹப் தொழுகைக்காக வுளூ செய்து கொண்டிருந்தார் - அதாவது கைகால் கழுவிக் கொண்டிருந்தார். ஜாமிதைக் கண்டதும் ஓடி வந்து தழுவிக் கொண்டார். ''ஆண்டவனே! உன்னைத்தான் இந்தக் கண்கள் தேடி அலைந்து கொண்டிருந்தன. நீ ஒருவனாக இத்தனை 'காப்பிரி'களின் பற்களை உடைத்துக் கையில் கொடுத்து விட்டாய். 'மோமின்' அறவோர்களின் இரத்தம்அல்லவா ஓடுகிறது? காப்பிரிகள் நிற்க முடியுமா உன்னை எதிர்த்து? எல்லோரும் உன்னைத் தாழ்மைப் படுத்த முயன்றார்களாமே? ஆனால் பேஷ்! எல்லோருடைய எண்ணங்களையும் நீ தவிடு பொடியாக்கி விட்டாய். இஸ்லாமுக்கு உன்னைப் போன்ற ஊழியர்கள்தான் வேண்டும். உன்னைப் போன்ற அறச் சிந்தனை உள்ளவர்களால்தான் இஸ்லாத்தின் பெயர் ஓங்கும்; ஒளி வீசும். நீ ஒரு மாதம் பொறுக்காதது தான் பெரிய தவறு! கல்யாணமும் செய்து கொண்டிருந்தால் கன குஷியா யிருந்திருக்கும். ஓர் அழகியை அழைத்து வந்திருக்கலாம். அவளோடு கைநிறையப் பணமும் அடித்துக் கொண்டு வந்திருக்கலாம். நீ கொஞ்சம் அவசரப்பட்டு விட்டாய்!'' என்று கூறினார்.

நாள் முழுதும் ஆண்டவனின் அடியார்கள் சாரி சாரியாக வந்த வண்ணம் இருந்தனர். ஜாமித்தை ஒரு முறை ஆசை தீரப் பார்க்க வேண்டும் என்று எல்லோருமே விரும்பினர். எல்லோரும் அவன் துணிவு, வலிமை, மத உணர்ச்சி ஆகியவற்றைப் பாராட்டி மகிழ்ந்தார்கள்.

## 4

இரவு முதல் யாமம் கழிந்து விட்டது. மக்கள் வந்து போவது குறைந்து விட்டது. ஜாமித் காஜி ஸாஹப்பிடம் அறநூல் படிக்க ஆரம்பித்தான். அவர் அவனுக்காகத் தமது பக்கத்து அறையையே ஒழித்துக் கொடுத்திருந்தார். அவன் காஜி ஸாஹப்பிடம் பாடம் படித்துவிட்டுப் படுக்கப் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது வாசலில் ஒரு வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. காஜி ஸாஹப்பின் சீடர்கள் இப்படி நேரம் கெட்ட நேரத்தில் கூட வருவது உண்டு. அப்படித்தான் யாரோ சீடர்கள் வந்திருக்கிறார்கள் என்று ஜாமித் எண்ணினான். கீழே வந்து பார்த்தால் ஒரு பெண்மணி வண்டியிலிருந்து இறங்கி வராந்தாவில் நின்று கொண்டிருந்தாள். வண்டிக்காரன் அவளுடைய பெட்டி படுக்கைகளை இறக்கிக் கொண்டிருந்தான்.

பெண்மணி வீட்டை ஒருமுறை சுற்றி முற்றிப் பார்த்துவிட்டு, ''இல்லையப்பா, இது அவர் வீடு இல்லை. எனக்கு நன்றாகத் தெரியும். ஒருவேளை நீ தவறியிருக்கலாம்!'' என்றாள்.

''எவ்வளவு சொன்னாலும் கேட்கவே மாட்டேன் என்கிறீர்களே! ஐயா வீடு மாற்றி விட்டார் அம்மா! மேலே வாருங்கள்!'' என்றான் வண்டிக்காரன்.

*பெண்மணி மேலே சென்றாள். அவள் பின்னால் வண்டிக்காரன் பொருள்களை எடுத்துக்கொண்டு சென்றான்.

ஜாமித் பேசாமல் கீழே நின்றுகொண்டிருந்தான். அவனுக்குவிவரம் ஏதும் விளங்கவில்லை.

வண்டிக்காரனின் குரல் கேட்டதும் காஜி ஸாஹப் எழுந்து எட்டிப் பார்த்தார். ஒரு பெண் வருவதைக் கண்டதும், அறையின் நாற்புறத்து ஜன்னல்களையும் நன்றாகச் சாத்தி விட்டு, மூலையில் மாட்டியிருந்த வாளை எடுத்துக்கொண்டு அறைக் கதவின் அருகில் வந்து நின்றுகொண்டார்.

பெண்மணி படியேறி வந்ததும் அறை வாசலில் காஜி ஸாஹப் நின்றுகொண்டிருப்பதைக் கண்டு சற்று நாணினாள். உடனே அவள் படியிறங்கத் திரும்பினாள். அதற்கு இடம் கொடாமல் ஒரே தாவாகத் தாவி அவள் கையைப் பிடித்துக் கொண்டார் காஜி ஸாஹப். அப்புறம் தரதரவென்று தம் அறைக்கு இழுத்துச் சென்றார். இதே நேரத்தில் ஜாமித், வண்டிக்காரன் இருவரும் மேலே ஏறி வந்துவிட்டார்கள். ஜாமித் இந்தக் காட்சியைக் கண்டு வியந்து வாய் அடைத்து நின்றான். ரகசியம் மேலும் பெரிய ரகசியமாகி விட்டது அவனைப் பொறுத்தவரையில். கல்விக் கடல், நீதிக் குவியல், நேர்மை தர்மம், தத்துவம் ஆகியவற்றின் உறைவிடம் என்று கூறக் கூடிய காஜி ஸாஹப் அந்த நேரத்தில் முன் பின் அறிமுகம் இல்லாத பெண்மீது பயங்கரக் கொடுமை இழைக்க முற்பட்டது கண்டு அவன் உறைந்தே போனான். உடனேச் சிலிர்த்துக் கொண்டு அவனும் வண்டிக்காரனும் காஜி ஸாஹப்பின் அறைக்குள் நுழைந்தனர். காஜி ஸாஹப் பெண்ணின் இரண்டு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தார். வண்டிக்காரன் அறைக் கதவையும் சாத்தி விட்டான்.

பெண்மணி இரத்தம் உமிழும் கண்களோடு வண்டிக்காரனைப் பார்த்துச் சீறினாள்: ''எதற்காக என்னை இங்கு அழைத்து வந்தாய்?''

காஜி ஸாஹப் வாளைச் சுழற்றியவாறு, ''முதலில் நிம்மதியாக உட்காரு. எல்லாம் தானாகத் தெரியும்'' என்றார்.

''உன்னைப் பார்த்தால் மௌல்வியாகத் தோன்றுகிறதே! உனக்கு ஆண்டவன் இது தான் சொல்லிக் கொடுத்திருக்கிறாரா? பிறர் மனைவியையும் மகள்களையும் பலாத்காரமாக வீட்டில் கொண்டு வந்து பூட்டி அவர்கள் மானத்தை வாங்கவா பணித்திருக்கிறார்?'' என்று கேட்டாள் பெண்மணி.

''ஆம்; ஆண்டவனின் கட்டளை இதுதான். காப்பிரிகளைக் கூடுமானவரையில் இருத்தி

* அட்டைப்படம்.

இஸ்லாம் வழியில் கொண்டு வருமாறு ஆணை யிட்டிருக்கிறார். தன்னிச்சையாக மாற மறுத்தால் வலுக்கட்டாயப்படுத்தியும் திருத்துவோம்!'' என்றார் காஜி ஸாஹப்.

''இதே போல் உங்கள் மனைவி மக்களைக் கடத்திச் சென்று யாராவது மானபங்கப் படுத்தினால்....?'' என்றாள் பெண்மணி.

''அதுவும்தான் நடக்கிறதே! நீங்கள் எங்களோடு எப்படி நடந்து கொள்கிறீர்களோ, அப்படியே நாங்களும் உங்களிடம் நடந்து கொள்கிறோம். ஆனால் நாங்கள் மானபங்கப் படுத்துவதில்லை. எங்கள் மதத்தில் சேர்த்துக் கொண்டு விடுகிறோம். இஸ்லாமை ஏற்பதனால் மதிப்பு உயர்கிறதே ஒழியக் குறைவதில்லை. இப்பொழுதுதான் இந்து மதமே எங்களை விழுங்கத் தருணம் பார்த்துக் கொண்டிருக்கிறதே! - நிலைமை இப்படி இருக்கும் பொழுது எங்களுக்கு வேறு வழி என்ன? நாங்கள் ஆட்பலம் குன்றியவர்கள். அதனால் வேறு வழியின்றி எங்களைக் காத்துக்கொள்வதற்காக இப்படியெல்லாம் செய்யும்படி ஆகிறது! — ஆமாம்! நீ எதற்காக இப்படி நடுங்கிச் சாகிறாய்? உனக்கு இங்கே எந்தவித இன்னலும் ஏற்படாது. இஸ்லாம் பெண்ணுரிமைகளுக்குப் பெருமை அளிப்பது போல் வேறு எந்த மதமும் அளிப்பதில்லை. இஸ்லாமிய ஆண்கள் தங்கள் மனைவிமார்கள் மீது உயிரையே வைத்திருக்கிறார்கள். இதோ என் இளம் நண்பன் ஜாமித் உன் எதிரே நிற்கிறானே, இவனோடு உனக்கு 'நிக்காஹ்' செய்து வைக்கப்படும். நீ ஆனந்தமாக உன் வாழ்க்கையைக் கழிக்கலாம்!'' என்றார்.

''நான் உன்னையும் உன் தர்மத்தையும் வெறுக்கிறேன். நீங்கள் நாய்கள். நாய்களினும் கேடு கெட்டவர்கள். இதைத் தவிர உங்களுக்குச் சூட்ட வேறு பெயர் கிடைப்பது அரிது. உன் நலனை விரும்பினால் என்னை இங்கிருந்து போக விடு. இல்லாவிட்டால் சத்தம் போட்டு ஊரைக் கூட்டிவிடுவேன். உன் மௌல்வி வேஷம் அக்கணமும் கலைந்து விடும்!'' என்றாள் அந்த இளம் பெண்.

''வாயைத் திறந்தால் உன் உயிரை இழக்க வேண்டியிருக்கும். நினைவு வைத்துக்கொள்!''

''மானம்தான் பெரிது. மானத்துக்கெதிராக உயிருக்கென்ன மதிப்பு? என் உயிரை வேண்டுமானால் நீ வாங்கலாமே ஒழிய என் மானத்தை வாங்க முடியாது. நீயும் நினைவு வைத்துக்கொள்!'' என்று கர்ஜித்தாள் பெண்.

''நீ வீணில் பிடிவாதம் பிடிக்கிறாய்!'' என்றார் காஜி ஸாஹப்.

அந்தப் பெண் கதவருகில் சென்று, ''நான் கூறுவதைக் கேள். கதவைத் திறந்துவிடு!'' என்றாள்.

ஜாமித் இந்நேரம்வரை பேசாமல் நின்று கொண்டிருந்தான். பெண் கதவண்டை செல்வதைக் கண்டு காஜி ஸாஹப், அவள் கையைப் பற்றினாரோ இல்லையோ, ஜாமித் சட்டென்று கதவைத் திறந்து விட்டான். காஜி ஸாஹப்பைப் பார்த்து ''இவர்களை விட்டுவிடுங்கள்!'' என்று கண்டிப்புக் கலந்த குரலில் கூறினான்.

''என்ன உளறுகிறாய்?'' என்று இரைந்தார் காஜி ஸாஹப்.



''சினிமா ஸ்டார் போல இரண்டு லேடி டைப்பிஸ்ட் நம்ம ஆபீசுக்குத் தேவை என்றீர்களே! அழைத்து வந்திருக்கிறேன்: இன்ஸானியத் ஜிப்பியும் ஹாதி மேரே ஸாதி யானையும் இவங்க கிட்டே பிச்சை எடுக்கணும்!''

''உளறவில்லை. இவர்களை விட்டுவிடுவது தான் உங்களுக்கு நலன் பயக்கும்!'' என்றான் ஜாமித்.

ஆனால் காஜி ஸாஹப் அவள் கையை விடவில்லை. வண்டிக்காரனும் அவர் உதவிக்காக முன்னேறுவதைக் கண்ட ஜாமித் சட்டென்று காஜி ஸாஹப்பின் கையைப் பற்றி ஒரு வெட்டு வெட்டி அப்பால் தள்ளினான். அந்தப் பெண்மணியின் கையைப் பற்றிக் கொண்டு விடுவிடுவென்று அறையை விட்டு வெளியேறினான். வண்டிக்காரன் பின்னால் பாய்ந்தான். ஜாமித் தள்ளிய தள்ளலில் அவன் ஒரு மூலையில் போய்க் குப்புற விழுந்தான். அடுத்த கணம் ஜாமித் அந்தப் பெண் இருவரும் தெருவில் இருந்தனர்.

''உங்கள் வீடு எந்தத் தெருவில் இருக்கிறது?'' என்று அந்தப் பெண்ணைக் கேட்டான் ஜாமித்.

''அஹரியாகஞ்சில்!''

''வாருங்கள். உங்களைக் கொண்டு விட்டு விட்டு வருகிறேன்!''

''உங்கள் இந்த உதவியை ஒருநாளும் மறக்க மாட்டேன். இன்று நீங்கள் என் மானத்தைக் காப்பாற்றினீர்கள். நீங்கள் மட்டும் உதவாவிட்டால் என் நிலை என்னவாகியிருக்குமோ? நினைத்தாலே நெஞ்சம் நடுங்குகிறது. நல்லவர் — தீயவர் எங்கும் உண்டு என்பதை இன்று நான் கண்கூடாகக் கண்டேன். என் கணவர் பெயர் பண்டித் ராஜகுமார்!'' என்றாள் பெண்.

அப்பொழுது ஒரு வண்டி சாலையில் வந்தது. ஜாமித் அந்தப் பெண்ணை அதில் ஏற்றிவிட்டுத் தானும் வண்டி ஏறப் போனான். அப்பொழுது காஜி ஸாஹப் குறி பார்த்து அவன் மீது குண்டாந்தடியை வீசினார். நல்லவேளையாக அது குறி தவறி வண்டியை மட்டும் தாக்கியது. ஜாமித் சட்டென்று வண்டியில் அமர்ந்தான். வண்டி விரைந்தது.

அலிகார் கஞ்சில் பண்டித் ராஜகுமாரின் விலாசத்தைக் கண்டுபிடிப்பதில் எவ்வித சிரமமும் ஏற்படவில்லை. ஜாமித் குரல் கொடுத்ததும் அவர் பதற்றத்தோடு வெளியே வந்தார். தன் மனைவியைக் கண்டதும், ''நீ எங்கே போய் விட்டாய் இந்திரா! உன்னை எத்தனை தேடியும் ஸ்டேஷனில் காணவில்லையே! ஆனால் நான் ஸ்டேஷனுக்கு வரக் கொஞ்சம் தாமதமாகி விட்டது! ஆமாம், ஆனாலும் வீட்டுக்கு வர இத்தனை தாமதம் ஏன்?'' என்றார்.

இந்திரா வீட்டுக்குள் அடி எடுத்து வைத்த வண்ணம், ''அது பெரிய கதை. கொஞ்சம் மூச்சு விட நேரம் கொடுங்கள். விவரமாகச் சொல்கிறேன். ஒரு விஷயம், இந்த இஸ்லாமிய சகோதரர் மட்டும் சமயத்தில் எனக்கு உதவவில்லையானால் என் மானமே பறி போயிருக்கும்!'' என்றாள்.

பண்டித் ராஜகுமார் முழு விவரத்தையும் கேட்டறியத் துடித்தார். இந்திராவின் பின்னாலேயே உள்ளே சென்றவர், ஒருசில நிமிஷங்களுக்கெல்லாம் திரும்பி, ''அன்பரே! நீங்கள் என் உடன் பிறவாச் சகோதரர்! வெளிப்படையாகச் சொல்லவில்லை. அந்தரங்க சுத்தமாகச் சொல்கிறேன். உங்கள் உருவத்தில் நான் என் இஷ்ட தெய்வத்தைக் காண்பதுபோல் உணருகிறேன். உங்களுக்கு நன்றி சொல்ல என் நாவுக்கு வலிமை இல்லை. வாருங்கள், 'வந்து உட்காருங்கள்!'' என்றார்.

''இல்லை, எனக்கு உத்தரவு கொடுங்கள்!'' என்றான் ஜாமித்.

''உங்கள் இந்த நன்றிக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?''

''இந்தத் தீச்செயலுக்கு நீங்கள் குற்றமற்ற ஏழை எளிய முஸ்லிம்களைப் பழி வாங்காமல் இருந்தால் அதுவே எனக்குப் பெரிய கைம்மாறு. என் விண்ணப்பமும் இது தான். இதை ஏற்றால் அதுவே எனக்கு மகிழ்ச்சியைத் தரும்!'' என்றவன், அப்புறம் அங்கே ஒரு கணம் கூட நிற்கவில்லை.

இருள் சூழ் இரவின் அந்த அமைதியில் ஜாமித் அந்த நகரத்தை விட்டே வெளியேறி விட்டான்.

அந்த நகரத்தின் நஞ்சு தோய்ந்த காற்றில் மூச்சு விடுவதே அவனுக்குச் சிரமமாயிருந்தது. அவன் எவ்வளவு முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அந்த நகரத்தை விட்டு வெளியேறித் தன் கிராமத்தை அடைய விரும்பினான்.. அங்கு தான் அவனுக்கு மதம் அன்பு, அநுதாபம், நட்பு என்னும் பெயர் பூண்டு வாழ்வதாகப் பட்டது. தர்மம் — தர்ம நெறியில் வாழ்வதாகக் கூறிக் கொள்கிறவர்கள் — இவர்களை அவன் மனம் அறவே வெறுத்தது.

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

வட்டமேஜை

# என்று ஒழியும் 'ராகிங்' தொல்லை?

மாணவர்கள் புரியும் 'ராகிங்' (Ragging) கொடுமை பற்றி இதுவரை வந்த செய்திகளையெல்லாம் தூக்கி அடிப்பதாக உள்ளது இன்று (15–9–72) 'ஹிந்து'வில் வெளியாகியுள்ள செய்தி! மீரட் மருத்துவக் கல்லூரியில் புதிதாகச் சேர்ந்த ஒரு மாணவரையும் மாணவியையும் ஆடைகளைக் களையச் செய்து நிர்வாணமாக்கி, ஒருவரை ஒருவர் முத்தமிடும்படி வற்புறுத்தினார்களாம், சீனியர் மாணவர்கள்! வெட்கக்கேடு! மருத்துவ மாணவர்களின் லட்சணமா இது? இவர்களின் விகார மனங்களுக்கு மருந்து கொடுப்பது யார்?

இவ்வாண்டு கோவை பொறி இயற் கல்லூரியில் சேர்ந்துள்ள மாணவர் ஒருவர் இந்த 'ராகிங்' -தொல்லை பொறுக்காமல் 'எனக்கு இந்தப் படிப்பே வேண்டாம், அம்மா! நான் சென்னைக்குத் திரும்பிவிடுகிறேன். கட்டின பணம் போனாலும் போகட்டும்' என்று தன்னுடைய தாய்க்கு எழுதியுள்ளார். 'இப்படியுமா கொடுமைப்படுத்துவார்கள்?' என்று அந்த மாணவரின் தாயாரே என்னிடம் கூறி வேதனைப்பட்டாள்.

இன்றையச் செய்தியைப் படித்தவுடன், கோவை நிலவரம் எவ்வளவோ மேல் என்று எண்ணும்படியிருக்கிறது. இந்த அநாகரிகப் பழக்கத்தை இன்னமும் ஏன் கைவிட மறுக்கிறார்கள் மாணவர்கள்? மாணவர்கள்தான் அறியாமையால் இப்படிச் செய்தனர் என்றால் அரசு ஏன் அசையமாட்டேனென்கிறது?

சென்னை — 34
15—9—72
பானுமதி

**அநாகரிக நிகழ்ச்சி!**

கடந்த 17—9—72 அன்று நடைபெற்ற அறிஞர் அண்ணா பிறந்த நாள் ஊர்வலத்தில், ஊர்வலத்தின் முன்னோடியாக வந்த ஒரு நிகழ்ச்சி மக்களின் மனத்தை, குறிப்பாகப் பிராமணர்களின் மனத்தை மிகவும் புண்படுத்தியது. அந்நிகழ்ச்சி என்னவெனில், பிராமணர் வேடமணிந்த ஒருவர் பயந்துகொண்டு ஓடுவதுபோல் ஓடினார். அவரைப் பல தி. மு. க. காளிகள் துரத்திச் சென்று அடித்து உதைத்தனர். இது பிராமணர்களை மிகவும் இழிவுபடுத்தியதும், அவமதித்தது மான ஒரு செயலாகும். இந்நிகழ்ச்சியானது, தி.மு.க.வினருக்குப் பிராமணர்கள் மீதுள்ள காட்டத்தைத் தெளிவாக வெளிப்படுத்தியது. 'அண்ணாவின் கொள்கைகளைச் செயல்படுத்தி வருகிறோம்' என்று மார் தட்டிக் கொள்ளும் தி. மு. க. தம்பிகள், ஜாதி, மத, பேதம் கூடாது என்ற அண்ணாவின் பிறந்த தினத்தைக் கொண்டாடும் முறை இதுதானா? 'டாக்டர் கலைஞர்' அவர்கள், இதுபோன்ற ஒரு நிகழ்ச்சியை அனுமதித்தது ஏன்?

சென்னை — 5
18—9—72
முரளி சௌந்தர்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)



# ஒளிமிகுந்த கண்களுக்கு உகந்தது சிங்கார் கண்மை

உங்களைச் சுற்றியுள்ள உலகை உங்கள் ஒளிப்பார்வையினால் வெற்றிகொள்ளுங்கள். கண்களின் இயற்கைக் கவர்ச்சியை இதமுடனே போற்றி காக்கும் சிங்கார் கண்மை உபயோகியுங்கள். கசிந்து பரவாமலும், அழகைச் சிதைக்காமலும் இருக்கும் சுகாதாரமான கண்மை இதுவே.




கண்மை



பாரமவுண்ட் ப்ராடக்ட்ஸ்
809, பிரசாத் சேம்பர்ஸ்,
பம்பாய்-4 (BR)






PRATIBHA 2014-4 TM